# சிவனடியார்களின் சீரியவாழ்வு

நா. பழனிவேலு

மனோன்மணி பதிப்பகம்
மா.காடுவெட்டி, அறந்தாங்கி (அஞ்சல்)
கா.ம.கோயில் வட்டம், தெ.ஆ.மாவட்டம்

# அணிந்துரை

டாக்டர். பொன். சௌரிராசன்,
எம்.ஏ.,பிஎச்.டி ,டிப்-இன்-லிங்.,
தமிழ்ப்பேராசிரியர்,
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்,
திருப்பதி—517502

'யான்', 'எனது' என்னும் செருக்குகள் ஒவ்வொரு காலத்தில், ஒவ்வொரு இடத்தில், ஒவ்வொரு வகையில் மானுடத்தை வீழ்த்துகின்றன. அதனை விலங்கு நிலைக் குத் தாழ்த்திச் சிறுமைக்கு ஆளாக்குகின்றன. அருளைக் காண்பதற்கு எடுத்த இந்தப் பிறவியை இந்தப்பிறவியில் அன்பு, பண்பு, பகுத்துண்ணல், குறிக்கோளுடைமை முதலியன மேற்கொள்ளாது தாழ்த்திவிடுகின்றன. இந்த வீழ்ச்சியிலிருந்து - சிறுமையிலிருந்து - தாழ்ச்சியிலிருந்து மானுடத்தை உய்வித்து, உயர்த்தி இறையருளுக்கு உரிய தாக்கும் பொருட்டு சான்றோர்கள் வாழ்கிறார்கள். வாழ்ந்து வழிகாட்டுகின்றார்கள். வாழ்ந்து வழிகாட்டிய சான்றோர்கள் கண்ட நெறி, கொண்ட கொள்கை நமக்கு வழிகாட்டுவனவாக அமைந்துள்ளன.

அத்தகு சான்றோர்கள் அறுபத்து மூவர் வாழ்வினை வடித்துத் தருகின்ற இலக்கியமே பெரியபுராணமாகும். இறையருளுக்குச் சாதி தடையில்லை. தொழில் குறுக்கே நிற்பதில்லை. உண்மை உள்ளமும் தூய தொண்டுமே இறையருளைத் தருவன ஆகும் என்னும் உண்மையை இந்த இலக்கியம் நிலை நாட்டுகின்றது. சமுதாயத் தரத்தில் கடையனாயினும், அனைத்தும் உடையனாயினும் இறைவன் முன்னர் எல்லாரும் ஒத்தாரே என்ற கொள்கையை உருவாக்கிக் காட்டுவதே இந்த நூல் ஆகும்.

பண்டைத் தமிழர் வாழ்வில் சாதிகள் இல்லை. தேவார மூவர் காலத்தில், ஆழ்வார் பன்னிருவர் காலத்

தில் சாதி வெறி இல்லை. ஆனால், பன்னிரண்டாம் நூற்றாண்டு வாக்கில் சாதி வேறுபாடு, பொருளாதார ஏற்றத்தாழ்வு தனி மனிதனுடைய சமுதாயத் தரத்தை-சமய வழிபாட்டுச் சிறப்பைத் திட்டமிடும் கருவிகளாயின. இக்கருவிகளினால் இறையன்பில் தம்மையே இழந்த அகங்கார, மமகாரம் அற்ற சான்றோர்களும் தாழ்ந்த சாதியில், வறிய குடும்பத்தில் பிறந்த காரணத்தால் உரிய சிறப்பும் உரிமையும் பெறாமற் போயினர். ஒரு கடவுளைத் தங்கள் உயிர்த் துணைவனாகக் கொண்ட மக்களும் இத் தகு சமுதாயப் பிரிவுகளால்—பிளவுகளால் ஒடுக்கப் பட்டனர்— அடக்கப்பட்டனர். இத்தகு குறைகளெல்லாம் நீங்கித் தமிழினம் தன் பண்பாட்டை மீண்டும் உணர்ந்து பின்பற்றி வாழாதா? என்ற ஏக்கம் அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் நெஞ்சில் எழுந்தது. அந்த நெஞ்ச நினைவு பெரிய புராணமாக உருவாயிற்று.

அடியார்களின் வாழ்வைக் கூறுவதன்வழி தமிழர் களின் அதாவது, தமிழ் இளைஞர்களின், சிறுவர்களின்' பெண்களின், ஆண்களின், ஆட்சியாளர்களின், அலுவலர் களின் பண்பாட்டை இந்த இலக்கியத்தின் வழி சேக் கிழார் மீட்டுருவாக்கம் செய்துள்ளார். அவர்தம் இந்த அரிய செயலை இந்த இளைஞர் இந்த நூல்வழி சிறப் பாகத் தெளிவு செய்துள்ளார். இந்தத் தெளிவு ஆட்சி யாளர் அதிகாரத்தால் பிளவு பட்டுக்கிடக்கிற இன்றைய தமிழகத்துக்கு மிக மிக இன்றியமையாதது. இறைநெறி, இயற்கைநெறி இவற்றை அறியாது, அறிந்தும் பின்பற்றாது வருந்தும் இந்தச் சமுதாயம் இதனைக் கற்பதன் வழி ஓரளவேனும் பயனுறும் என்று நம்புகிறேன். நம்பினோர் கெடுவதில்லை.

**டாக்டர். பொன். சௌரிராசன்**

# நன்றியுரை

இந்நூலினை வெளியிடுவதற்கு நிதிஉதவி வழங்கி யருளிய திருமலை—திருப்பதி தேவத்தானத்தினருக்கும்,

இலக்கிய ஆய்விலும், வாழ்வியலிலும் என்னை நெறிப் படுத்திக்கொண்டிருக்கின்ற திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர், திரு. பொன் சவுரிராசன் அவர்களுக்கும்,

என் வளர்ச்சிக்கு ஒல்லும் வகையான் உதவி வருகின்ற திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தெலுங்குத் துறைப் பேராசிரியர், திரு.சர்வோத்தமராவ் அவர்களுக்கும்,

நேரு நினைவுக் கல்லூரியின் முதல்வர், பேராசிரியர் திரு. மூ. பொன்னம்பலம் அவர்களுக்கும், அக்கல்லூரியின் நிர்வாகச் செயலர் திருமதி. பொன். சிவனேஸ்வரி அவர்களுக்கும்,

'சப்தகிரி'யின் (தி.தி. தேவத்தான திங்கள் இதழ்) துணை ஆசிரியர் திரு. என். எஸ். இராமமூர்த்தி அவர் களுக்கும்,

எனக்குப் பல்லாற்றானும் உதவிகளைச் செய்து வருகின்ற டாக்டர். திரு. தனராஜ், எம்.எஸ்., அவர்களுக் கும், டாக்டர். திருமதி. நாராயணி அவர்களுக்கும்,

இந்நூலின் அச்சுப் படிகளைத் திருத்தி உதவிய என் இனிய உடன்பிறப்பு திரு.கோ. பிலவேந்திரன், எம்.ஏ., எம்.' .பில்.,பி. எட்., அவர்களுக்கும்,

இந்நூலைச் செம்மையாக அச்சிட்டு வழங்கிய கே.பி.டி. பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு. சேரன் அவர்களுக்கும், அச்சகத் தொழிலாளர்களுக்கும்,

என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்கி வணங்கு கின்றேன்.

**நா. பழனிவேலு**

# காணிக்கை

எனக்குக் கல்வி தந்து, என்னை ஆளாக்கி நெறிப் படுத்திக் கொண்டிருக்கின்ற என் ஆசிரிய தெய்வங்கள்

பேரா. டாக்டர். பொன். சௌரிராசன்
(தமிழ்ப் பேராசிரியர், திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி)

பேரா. டாக்டர். இரா. செல்வக்கணபதி
(முதல்வர், த.ஆ. கலைக் கல்லூரி, தருமபுரம், மயிலாடுதுறை)

பேரா. டாக்டர். சே. இராமலிங்கம்
(தமிழ்ப் பேராசிரியர், நேரு நினைவுக் கல்லூரி, புத்தனாம்பட்டி)

திருமதி. க. சந்திரா செல்வக்கணபதி
திருமதி. கலாவதி இராமலிங்கம்

— ஆகியோர்களுக்கு இந்நூலைப் பணிவுடன் காணிக்கையாக்குகின்றேன்.

# உள்ளுறை

1. பெரியபுராணம்—ஓர் அறிமுகம் 1

2. பெரியபுராணத்தில் பக்திச் சுவை 19

3. சிவனடியார்களின் பண்புகள் 23

4. சிவனடியார்களின் சீரிய வாழ்வு 32

5. பண்பாடு—சொற் பொருள் விளக்கம் 49

6. பெரியபுராணத்தில் ஆடவர் பண்பாடு 53

7. பெரியபுராணத்தில் மகளிர் பண்பாடு 72

8. பெரியபுராணத்தில் சிறுவர் பண்பாடு 88

9. பெரியபுராணத்தில் பணியாளர் பண்பாடு 94

10. பெரியபுராணத்தில் ஆட்சியாளர் பண்பாடு 98

11. சிவனடியார்களின் சில சமூக உயர் நாட்டங்கள் 114

பயன்பட்ட நூல்கள் 127

பிற்சேர்க்கை

பெரியபுராணப் பதிப்புகளும்,
ஆராய்ச்சி/திறனாய்வு நூல்களும் 130

# 1. பெரிய புராணம் – ஓர் அறிமுகம்

பெரிய புராணம் - ஓர் அறிமுகம் என்னும் இவ் இயல் பெரிய புராணத்தின் புறவடிவமைப்பைப் பற்றிய - கட்டுக் கோப்பைப் பற்றிய (architectonics) கருத்துக்களைக் கூறும் போக்கில் அமைகின்றது.

இவ்வியலில்,

அ. பெரிய புராண வரலாறு

ஆ. பெரிய புராணத்தின் மூல நூல்கள்

இ. பெரிய புராண அமைப்பு

ஈ. பெரிய புராண உள்ளீடு

உ. சேக்கிழார் காலம்

என்னும் தலைப்புகளில் செய்திகள் பகுத்தாராயப் பெறு கின்றன.

**அ. பெரிய புராண வரலாறு:**

'பெரிய புராணம்' என வழங்கப்பெறும் '**திருத் தொண்டர் புராணம்**' தமிழ் மொழிக்கு உயரிய தரத்தை நல்கக்கூடியது. அதனால் தான், "**தொண்டர் புராணம்** தொகை சித்தி ஓராறுந் தண்டமிழின் மேலாந்தரம்"[1] என்று பெரிய புராணம் போற்றப் பெறுகின்றது.

பெரிய புராணம் தோன்றிய வரலாற்றைச் "**சேக்கிழார் புராணம்**" மிக விரிவாக விளக்குகின்றது. சேக்கிழார் புராணத்தை ஆழ்ந்து நோக்கினால், 'சோழமன்னன் இரண்டாம் குலோத்துங்கன் '**சீவக சிந்தாமணியின்** மீது கொண்டிருந்த அளவிலாக்காதலை மாற்றுவதற்

---

1. தனிப்பாடல்

காகவும், சைவ இலக்கியங்கள் மீதும், புராணங்களிடத்தும் அவனது கவனத்தைத் திருப்புவதற்காகவும் பெரிய புராணம் இயற்றப்பட்டிருக்கலாம்'[1] என்பது தெரிய வருகிறது.

சமய அடிப்படையில் நோக்கினால், சைவ சமய அடியார்களது வாழ்க்கை வரலாறுகளை மக்களுக்கு அவர் தம் மனம் ஏற்றுக் கொள்ளும் வகையில், மகிழும் வகையில் ஒளியூட்டிக்காட்டிச் சைவ சமயத்திற்குப் புத்துயிர் அளித்துப் பரவச் செய்வதற்காகவும் இயற்றப்பட்டிருக் கலாம் என்று கருதலாம்.

'சேக்கிழார் புராணம்' கூறும் பெரியபுராண வரலாறு பற்றிய செய்திகளே பெரிய புராணத்தோற்றம் பற்றிய முழுமையான செய்திகளாக ஆகாது, அதுவும் ஒரு காரணமே தவிர அதுவே முழுமையான காரணமாக ஆகாது. அது சமய நோக்கில் அமைந்த காரணமேயாகும். சமுதாய மற்றும் இலக்கிய வரலாற்றடிப்படையில் ஆய்வு செய்தால் 'சேக்கிழார் புராணம்' கூறுகின்ற பெரிய புராணத் தோற்றம் பற்றிய கருத்துக்கள் எந்த அளவுக்குப் பொருத்தமுடையது என்பது தெரியவரும்.

சைவசமயம், கி.பி. 7 ஆம் நூற்றாண்டு முதல் சேக்கிழார் காலம் வரை ஏறத்தாழ 500 ஆண்டுகள் தமிழகத்தில் அரசுச்சார்பு சமயமாகக் கொடிகட்டி வளர்ந்து-வாழ்ந்து ஆதிக்கம் செலுத்தி வந்தது. இக்கால கட்டங்களில் சைவ சமயம் நன்கு செழிப்போடு தழைத்தினி தோங்கியதே தவிர, சமுதாய நல்லிணக்கம் மேலோங்கி இருக்கவில்லை என்பதும்; சாதி வேறுபாடுகளும், வருணா

---

1. உமாபதி சிவாசாரியார், **சேக்கிழார்புராணம்**, பாடல்கள் 21-28.

சிரம வேறுபாடுகளும், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும் மேலோங்கியிருந்தன என்பதும் பெரிய புராணத்தைக் கூர்ந்து நோக்கும்போது புலனாகின்றன.

சிவ பெருமானை இறைவனாக ஏற்றுக்கொண்டும் தில்லை திருக்கோயிலுக்குள் நுழைய முடியாத அரிசன வகுப்பைச் சேர்ந்த நந்தனாரைப் பெரிய புராணம் குறிப் பிடுகின்றது.

பார்ப்பனரான திருநீலநக்கரது இல்லத்துள் திருநீலகண்டயாழ்ப்பாணருக்கு அவர் பிறந்த சாதியின் காரணத்தால் அவருக்குத் தங்குவதற்கு இடம் தரப்படுவ தில் வேறுபாடு காட்டப்பட்டது என்பதிலிருந்தும், அடிய வராய்த் திரும்பிய வேலையாளுக்கு நீர் வார்ப்பதில் கலிக் கம்பர் மனைவியார் தயக்கம் காட்டினார் என்பதிலிருந்தும் மேற்கூறப்பட்ட கருத்து உறுதியாகின்றது.

சமுதாய இணக்கத்தை—ஒருமைப்பாட்டை உருவாக்கு வதற்காகவும், மக்களுக்காகவும் அவர்களது நல்வாழ்வுக் காகவுமே சமயம் என்ற கருத்தை வலியுறுத்துவதற்காகவும் 500 ஆண்டுக்கால இலக்கியத் தேக்கத்தைத் தகர்த்து, **வடவேங்கடம் தென்குமரி ஆயிடைப்பட்ட தமிழ்மண்ணின் மைந்தர்களாகிய அடியார்களது** பக்தியையும், அவர்தம் பண்பாடுமிக்க வாழ்க்கையையும் ஒளியூட்டிக் காட்டி, சைவ சமயத்திற்குச் 'சீவக சிந்தாமணி'யைப் போல் காவியச் சுவையோடு பக்தியையும் கூறும்நூல் வேண்டு மென்பதற்காக சேக்கிழாரால் பெரியபுராணம் இயற்றி யருளப்பட்டது.

500 ஆண்டுக்கால இலக்கியத் தேக்கத்தைத் தகர்த்து, மனிதனை மையப் பொருளாகக் கொண்டு, இறைமைக் கொள்கையோடு முரண்படாது, மனிதனை முன்னி

றுத்தி மகத்தான திருப்புமுனை விளைத்த 'மானிட இலக்கியம்' பெரியபுராணம்,...... அது மக்களுக்கு இம்மை வாழ்வில் நம்பிக்கையூட்டி நெறிப்படுத்த முயன்ற முதல் முயற்சியின் வெளிப்பாடு.[1]

என்று டாக்டர். இரா. செல்வக்கணபதி கூறுவது குறிப்பிடத் தக்கது.

பெரியபுராணம், அதற்குமுன் தோன்றிய பதினோரு திருமுறைகள், தில்லை உலா போன்ற பிறநூல்கள்; அக்காலத்தே வழக்கில் நிலவிய செவி வழிச் செய்திகள்; சமணம், பௌத்தம் ஆகிய பிற சமய நூல்கள், நாயன்மார்களைப்பற்றிய கல்வெட்டுகள், சிற்பங்கள், ஓவியங்கள் போன்றவற்றை அகச் சான்றுகளாகக் கொண்டு இயற்றப் பட்டது.

சேக்கிழார், இரண்டாம் குலோத்துங்கனின் தலைமை யமைச்சராகத் திகழ்ந்ததால் அமைச்சருக்குரிய அனைத்து வசதிகளோடும் தானே பல இடங்களுக்கும் நேரில் சென்று அடியார்கள் வாழ்ந்த ஊர்களையும், வழிபட்ட திருத் தலங்களையும், சுற்றிப் பார்த்து அவர்களைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புகளை எல்லாம் கேட்டறிந்தும், நேரிற் கண்டவற்றைக் கவனத்திற் கொண்டும் தன்காலச் செய்திகளைச் சிறிதுகூட திணிக்காது பெரியபுராணத்தை இயற்றியருளியுள்ளனர்.

---

1. டாக்டர். இரா. செல்வக்கணபதி, "சைவமும்-பெரிய புராணமும்" (கருத்தரங்கக் கட்டுரை) தமிழ்ப் பல்கலைக் கழகம், தத்துவமையம்—காஞ்சிபுரம், நாள் 11-3-1985.

### ஆ. பெரிய புராணத்தின் மூலநூல்கள்:

முதல் நூல், வழிநூல் என நூல் ஆக்கப்படும் இரு வகை நெறியைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். பவணந்திமுனிவர் இவற்றோடு சார்பு நூலையும் இணைக்கிறார்.

வினையின் நீங்கிய விளங்கிய அறிவினனாகிய முனைவனால் இயற்றப்படுவது முதனூலாகும்.

வழிநூல்கள் தொகை, விரி, தொகைவிரி, மொழிபெயர்ப்பு என நான்கின் அடிப்படையில் இயற்றப்படல் வேண்டும்.

முதனூலாசிரியர் விரித்துரைத்ததை தொகுத்துரைப்பது தொகை நூலென்றும், தொகுத்துரைக்கப் பெற்றதை விரித்துரைப்பது விரிநூலென்றும், தொகுத்தும் விரித்தும் உரைப்பது தொகைவிரி நூலென்றும், பிறமொழியிலுள்ள நூல்களை மொழிபெயர்ப்பது மொழிபெயர்ப்பென்றும் கூறுவர். முதல்நூல், வழிநூல், சார்பு நூல் என்றும் குறிப்பிடுவர்.

சுந்தரர் தனது '**திருத்தொண்டத் தொகை**'யில் அடியார்களது வரலாறுகளைத் தொகுத்துப் பதினோரு (11) பாடல்களில் கூறியுள்ளார்.

நம்பியாண்டார் நம்பி, திருத்தொண்டத் தொகை கூறும் அடியார்களது வரலாறுகளை அவர்களது பிறந்த ஊர், நாடு, மரபு, செய்ததொண்டு என்று வகைப்படுத்தி எண்பத்தொன்பது (89) பாடல்களில் கட்டளைக் கலித்தொகை யாப்பில் "**திருத்தொண்டர் திருவந்தாதி**" என்னும் பெயரில் அந்தாதித் தொடை அமைந்து வரும்படி பாடியுள்ளார்.

இவ் இருநூல்களையும் முறையே தொகைநூலாக வும், வகைநூலாகவும் கொண்டு சேக்கிழார் தனது பெரிய புராணத்தை இயற்றியருளினார் என்பது

தொன்று சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
இன்றென் ஆதரவாலிங் இயம்பு கேன்[1]

என்பதால் தெரிய வருகிறது.

மற்றிதற்குப் பதிகம் வன் தொண்டர் தாம்
புற்றிடத் தெம் புராணர் அருளினால்
சொற்ற மெய்த் திருத் தொண்டத்தொகை யெனப்
பெற்ற நற்பதிகம் தொழப் பெற்றதாம்.[2]

என்பதால் பெரிய புராணத்திற்குத் தொகைநூல் திருத் தொண்டத்தொகை என்பதும்,

அந்த மெய்ப் பதிகத் தடியார்களை
நந்தம் நாதனாம் நம்பி யாண்டார் நம்பி
புந்தி யாரப் புகன்ற வகையினால்
வந்தவாறு வழாமல் இயம்புவாம்[3]

என்று சேக்கிழார் கூறுவதால் பெரிய புராணத்திற்கு வகைநூல்'திருத்தொண்டர் திருவந்தாதி' என்பதும் தெரிய வருகின்றன.

தொகையா நாவலூராளி தொடுத்த திருத்தொண்டப் பெருமை
வகையால் விளங்கவுயர் நம்பியாண்டார்நம்பி வகுப்ப மற்றதனைத்
தகையா அன்பின் விரித்துலகோர்.[4]

என்று கச்சியப்ப முனிவர் கூறுவதிலிருந்து மேற்கூறப்பட்ட செய்திகளனைத்தும் விளக்கம் பெறுகின்றன.

---

1. பெரியபுராணம், பாடல் எண், 37
2. பெரியபுராணம், பாடல் எண், 38
3. பெரியபுராணம், பாடல் எண், 39
4. கச்சியப்ப முனிவர், **காஞ்சிப் புராணம்** (பாயிரம்) 12.

சேக்கிழார் தனது பெரியபுராணத்தை திருத் தொண் டத் தொகையும், திருத்தொண்டர் திருவந்தாதியையும் முறையே தொகை நூலாகவும், வகை நூலாகவும் கொண்டு விரிநூலாகச் செய்தருளினார்.

> திருத் தொண்டத் தொகையையும் அதன் வகையாக அமைந்த திருத்தொண்டர் திருவந்தாதியையும் ஆதர வாகக் கொண்டு அடியார்களின் வரலாறுகளை விரித் துரைக்கும் விரிநூலாகச் சேக்கிழாரடிகள் இத்திருத் தொண்டர் புராணத்தை இயற்றியுள்ளார்.[1]

என்று க. வெள்ளை வாரணனார் கூறுவது குறிப்பிடத் தக்கது.

**இ. பெரிய புராண அமைப்பு:**

பெரியபுராணம் இருபெருங் காண்டகளையும், பதின் மூன்று சருக்கங்களையும் கொண்டது. காண்டங்களுக்குப் பெயர் கூறப்படவில்லை. இந்நூல் பாயிரம் (வாழ்த்து), திரு மலைச்சிறப்பு, திருநாட்டுச்சிறப்பு, திருநகரச்சிறப்பு, திருக் கூட்டச்சிறப்பு, தடுத்தாட்கொண்ட புராணம் ஆகியவற் றைத் தொடக்கமாகக் கொண்டமைகிறது. பதிகமாகத் திருத்தொண்டத்தொகை தடுத்தாட்கொண்டபுராணத்தை அடுத்து வர, பின்னர் திருத்தொண்டத் தொகை கூறுகிற அடியார்களின் வரலாறுகள் முறையாக தில்லை வாழந் தணர்கள் சருக்கத்திலிருந்து தொடர்கின்றன.

பெரிய புராணம் முதற்காண்டத்தில் 1. திருமலைச் சருக்கம், 2. தில்லை வாழ் அந்தணர்கள் சருக்கம், 3. இலைமலிந்த சருக்கம், 4. மும்மையால் உலகாண்ட சருக் கம், 5. திருநின்ற சருக்கம் ஆகிய சருக்கங்களும்: இரண்

---

1. க. வெள்ளை வாரணன், **பன்னிருதிருமுறை வரலாறு** (பாகம்-2), பக். 830-831.

டாம் காண்டத்தில், 6. வம்பறா வரிவண்டு சருக்கம், 7. வார்கொண்ட வனமுலையாள் சருக்கம், 8. பொய்யடிமை யில்லாத புலவர் சருக்கம், 9. கறைக்கண்டன் சருக்கம், 10. கடல் சூழ்ந்த சருக்கம், 11. பத்தராய்ப் பணிவார் சருக்கம், 12. மன்னிய சீர்ச் சருக்கம், 13. வெள்ளானைச் சருக்கம் ஆகிய சருக்கங்களும் அடங்கியுள்ளன.

முதற்சருக்கமாகிய திருமலைச் சருக்கமும், பதின்மூன் றாம் சருக்கமாகிய வெள்ளானைச் சருக்கமும் சுந்தரரைப் பற்றிய செய்திகளைக் கூறுவனவாக அமைந்துள்ளன.

திருமலைச் சிறப்பு, திருத்தொண்டத் தொகை தர ஆரூரிலே சுந்தரர் அவதரித்த வரலாற்றையும்; திருநாட்டுச் சிறப்பு சோழ நாட்டில் திருத்தொண்டத்தொகை பாடப் பட்டதனாலும்—பெரும்பாலான அடியார்கள் சோழநாட் டைச் சேர்ந்தவர்களாக இருப்பதனாலும் சோழ நாட்டுச் சிறப்புதிருநாட்டுச் சிறப்பாகவும்,திருத்தொண்டத்தொகை பாடப்பட்ட இடம் திருவாரூரானதால் திருவாரூர் சிறப்பு திருநகரச் சிறப்பாகவும், அறுபத்து மூவர் புராணங்களின் சாரமாயுள்ள தத்துவங்களைத் தொகுத்துக் கூறும் பாங் கில் திருக்கூட்டச் சிறப்பும் அமைந்துள்ளன.

அடுத்து அமைந்துள்ள தடுத்தாட் கொண்ட புராணத் தில் சுந்தரர் திருவவதாரம் செய்ததிறமும், புத்தூர் சடங்கவி சிவாசாரியார் மகளைத் திருமணம் செய்து கொள்ள முற்படும் போது கிழட்டு வேதியர்வடிவில் வந்த பெருமானால் சுந்தரர் தடுத்தாட் கொள்ளப்பட்ட செய்தி யும், திருத்தொண்டத் தொகையருளிய செய்தியும் கூறப் படுகின்றன. இதனையடுத்து, திருத்தொண்டத் தொகை கூறும் அடியவர்களது வரலாறுகள் முறையே தில்லை வாழந்தணர் சருக்கம் தொடங்கி மன்னிய சீர் சருக்கம் வரை விரித்துரைக்கப்படுகின்றன. இறுதியில் அமைந்துள்ள

வெள்ளானைச் சருக்கத்தில் சுந்தரர் வெள்ளையானை மீதேறிக் கழறிற்றறிவாரோடு இறைவனிடம் சென்ற -டைந்த வரலாறு கூறப்படுகின்றது.

சுந்தரர் திருத்தொண்டத் தொகையின் ஒவ்வொரு பாடலிறுதியிலும் "ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே" என்று குறிப்பிட, சேக்கிழார் ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும் சுந்தரரைத் துதித்து 'சுந்தரர் துதி'யாக ஒரு பாடலை அமைத்திருக்கிறார்.

பெரிய புராணத்திலுள்ள சருக்கங்களின் பெயர்கள் திருத்தொண்டத் தொகையிலுள்ள பதினோரு பாடல் களின் தொடக்கச் சொற்களாகவோ (அ) சொற்றொடர் களாகவோ அமைந்துள்ளன. முதல், இறுதி சருக்கங்களுக் கான பெயர்களை மட்டும் சேக்கிழார் தாமாகவே அமைத் துக் கொண்டார். பெரியபுராணத்திலுள்ள சருக்கங்களின் பெயர்களுக்கும் அவற்றுள் கூறப்படுகின்ற அடியார்களின் வரலாற்றிற்கும் இயைபோ அல்லது தொடர்போ காணப் படவில்லை. இவ்வமைப்பு காப்பியப் போக்கில் ஒரு விதமான குறையே என கருதலாம்.

பெரியபுராணம் 4253 பாடல்களைக் கொண்டது என உமாபதி சிவம் குறிப்பிடுவர்.[1] சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பில் பாடல் தொகை 4286 என்று குறிக்கப் பட்டுள்ளது. அதிகமாக உள்ள 33 பாடல்களும் பிற்காலத் தவர்களால் பாடி இடையிலே சேர்க்கப்பட்டனவாக இருக்கலாம்.

> பிற்காலத்தில் பெரியபுராணத்தில் இடைச்செருகல் களாக 33 பாட்டுக்கள் வரை புகுத்தப்பட்டன என்பது மட்டும் நிச்சயமாய்த் தெரிகிறது.[2]

---

1. உமாபதி சிவாசாரியார், **சேக்கிழார் புராணம்**, 53.
2. சி.கே. சுப்பிரமணிய முதலியார், **சேக்கிழார்**, ப. 208

என்று சி. கே. சுப்பிரமணிய முதலியார் கூறுவது குறிப்பிடத்தக்கது.

இடைச்செருகற் பாடல்கள் வருமிடங்களைப் பற்றி க. வெள்ளை வாரணனார்,

> திருமலைச் சருக்கத்தில் 9 முதல் 12 வரையுள்ள 5 பாடல்களும், கண்ணப்பநாயனார் புராணத்தில் 158 முதல் 162 வரையுள்ள பாடல்களும், சருக்கங்களின் முடிவில் அமைந்துள்ள கூற்றுவர், கணம்புல்லர், முனையடுவார், கோட்புலியார் புராணங்களில் அடுத்து வரும் புராணங்களுக்குத் தோற்றுவாயாக உள்ள நான்கு செய்யுட்களும் சில பிரதிகளில் இல்லாமையால் இவை வெள்ளிப் பாடல்கள் என கருதப் படுகின்றன[1]

என்று கூறுவது குறிக்கத்தக்கது. இதிலிருந்து பெரிய புராணத்தில் 4253 க்கு மேற்பட்ட பாடல்கள் அனைத்தும் இடைச்செருகற் பாடல்கள்தான் என்பது தெளிவாகிறது.

**ஈ. பெரியபுராணம் உள்ளீடு:**

பெரிய புராணத்தின் உள்ளீடுகளாகத் திகழ்வது பக்தியும், பண்பாடும், தொண்டுநெறியும், கொள்கை உறுதியுமேயாகும்.

> பெரியபுராணம் தொண்டர்களின் பெருமையைப் பாடும் சிறந்த காவியம், உயர்ந்த பக்திநூல் விழுமிய பண்பாட்டுக் கருவூலம் வரலாற்றுப் பாங்கு அமையப்பெற்ற தமிழ்ஏடு இது ஒன்றேயாகும்[2]

என்று 'தேசிய இலக்கியம்' என்ற நூலுக்கு சேகர் பதிப்பகத்தார் கூறும் பதிப்புரை இங்கு நினைவிற் கொள்ளத் தக்கது.

---

1. க. வெள்ளை வாரணன், ப. 1049.
2. அ.ச. ஞானசம்பந்தன், **தேசிய இலக்கியம்**, ப. 13,

பெரிய புராணத்தை ஆழ்ந்து ஆராய்ந்தால் வறுமை யான வாழ்க்கை நிலையிலும் அடியார்கள் இறைவனிடத்து நிகழ்த்திய பூசனை முதலிய செய்கைகளை இடைவிடாது நிகழ்த்திய தன்மையும், பின்பற்றிய கொள்கையில் ஊசி முனையளவு கூட வழுவாத-பிறழாத தன்மையும், அடியார்கள் தங்களது திருத்தொண்டின் வலிமையால் பக்தியின் உறைப்பால் இறைவனையே மானுடச் சட்டைதாங்கி விண்ணினின்று மண்ணிற்கு இறங்கி வர வைத்த ஆன்மீக வீரமும் பக்தியின் உறைப்பும் தெரிய வருகின்றன.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு குறிக்கோளுடன் வாழ வேண்டும். 'உயிரை விட்டாவது குறிக்கோளைக் காப்பாற்ற வேண்டும்' என்று வாழ்ந்து காட்டிய அடியவர்களின் வாழ்க்கை வரலாறே பெரிய புராணத்தின் கருப்பொருளாகத் திகழ்கிறது.

> குறிக்கோள் இல்லாத வாழ்க்கை பயனற்றது என்பதையும், மட்டமான குறிக்கோள் வாழ்க்கையில் நிலைத்த இன்பத்தைத் தராது என்பதையும் எடுத்துக் காட்டவே பெரிய புராணம் எழுதினார்[1]

என்று அ.ச. ஞானசம்பந்தன் சேக்கிழார் பெரிய புராணம் எழுதியதன் காரணத்தைக் குறிப்பிடுகிறார்.

தங்களது வாழ்க்கையில் உன்னதமான குறிக்கோள்களைக் கொண்டு வாழ்ந்து அதனால் பிறவிப் பயனைப் பெற்றவர்களின் - உலகம் போற்றும் சிறப்பினைப் பெற்றவர்களின் வரலாற்றைக் கூறுமுகமாகப் பெரிய புராணம் உலகத்தோரை அத்தகைய வாழ்வினை மேற்கொள்ளத் தூண்டியது என்றும் கருதலாம்.

---

1. அ.ச. ஞானசம்பந்தன், 67.

காப்பியம் படைக்கின்ற கவிஞர்களிடம் அவர்கள் காலத்திய அரசியல், சமூக, சமய, பொருளாதாரச் சூழல்கள் பெருமளவுக்குப் பாதிப்பை உண்டாக்கும். இதற்கு பெரும்பாலான இலக்கியப் படைப்பாளர்கள் விதிவிலக்கல்ல. சேக்கிழார் காலத்தில் நாடாண்ட மன்னனும் நாட்டுமக்களும் சைவ சமயத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தும், சமண காப்பியமான சீவக சிந்தாமணியின் மீது மிகுந்த விருப்பம் கொண்டு கற்றுத்திளைக்கலாயினர். மக்களும் பல்வேறு சாதிகளாகப்பிரிந்து சண்டை சச்சரவுகள் செய்து கொண்டு அமைதியின்றி வாழ்ந்துவந்தனர். அக்காலத்தில் சைவ சமயம் அரசுச்சார்பு சமயமாக மிகவும் வீறு பெற்று வளர்ச்சிப் பாதையை நோக்கி பீடுநடைபோட்டுக் கொண்டு எழுச்சியுடன் திகழ்ந்தது.

மக்கள் தங்களது வாழ்க்கையில் குறிக்கோள் ஒன்றில்லாமல் இன்ப வேட்டை ஒன்றையே கருத்தாகக் கொண்டு கீழ் நோக்கிய பாதையில் சென்று கொண்டிருந்தனர்' தம்முடைய மரபை, நாகரீகத்தை, பண்பாட்டைமெல்ல மெல்ல இழக்கத் தொடங்கினர்.

இச்சூழலில், இலக்கியம் படைக்க முனைந்த சேக்கிழார் தான் இயற்றிய பேரிலக்கியத்தின் மூலம் நாட்டுமக்களுக்குக் குமரிமுதல் வேங்கடம் வரை வாழ்ந்த செயற்கரிய செயல்செய்த சிவனடியார்களது வரலாற்றை எடுத்துக்கூறி அதன் மூலம் நாட்டுமக்களிடையே பக்தி உணர்வையும், பண்பாடுகளையும், சாதி ஒருமைப் பாட்டையும், தமிழ்த் தேசிய ஒருமைப்பாட்டையும், தனக்கென வாழாது பிறர்க்கென வாழ வேண்டும் என்னும் நெறிகளையும் வலியுறுத்திக் கூறுகிறார்.

நாயன்மாரது வரலாறு மூலம் பக்தி நெறியை வளர்க்கும் பாடல்களாகப் பெரிய புராணம் அமைந்துள்ளது.[1]

என்று டாக்டர். கு. நம்பியாரூரன் கூறுவதும்,

தெய்வப் புலமைச் சேக்கிழாரடிகள் தமிழகத்தின் சென்ற காலத்தின் பழுதிலாத்திறனும், எதிர் காலத்தின் சிறப்பும் விளங்க நிகழ்காலச் சமுதாயத்தைத் திருத்தி நிலை பெற்றுவளரும் முறையில், திருத்தொண்டர் புராணத்தைச் சிறந்த வரலாற்றுக் காப்பியமாகப் படைத்துள்ளார்[2]

என்று க. வெள்ளை வாரணனார் கூறுவதும் இங்கு நினைவு கூரத்தக்கன.

**காப்பியமும் - காப்பியத்தலைவரும்**

பெரியபுராணம் ஒரு பெருங்காப்பியம் என்றும், அதன் காப்பியத்தலைவர் சுந்தரர் என்றும் அறிஞர்கள் கூறுகின்றனர். பெரியபுராணத்தைச் 'செந்தமிழ்க்காப்பியம்' என்றும், 'பெருங்காப்பியம்' என்றும் க. வெள்ளைவாரணம் குறிக்கிறார். பெரியபுராணம் ஒரு 'பெருங்காவியம்'என்று சி.கே. சுப்பிரமணியமுதலியார் கூறுகிறார். பெரியபுராணத்தைக் காப்பியம் என்று கூறுகிறவர்கள் அனைவருமே சுந்தரர்தான் காப்பியத்தலைவர் என்று கூறுகின்றனர்.

பெரிய புராணத்தில் உயிர்த்தன்மையோடு கூடிய காப்பிய ஒருமை (unity) காணப்படவில்லை. இந்நூலில் இடம்பெறும் ஒவ்வொரு நாயன்மாரின் புராணமும் காப்

---

1. டாக்டர். கு. நம்பியாரூரன், ''பெரிய புராணம் வரலாற்றுநூல்'', **பெரியபுராணச் சொற்பொழிவுகள்** ப.97.
2. க. வெள்ளைவாரணன், ''சேக்கிழார் நூல்நயம்'', **பெரிய புராணச் சொற்பொழிவுகள்,** ப. 366.

பியக்கதையோட்டத்திற்கும், காப்பியத்தலைவர் என கருதப்படுகின்ற சுந்தரர் வரலாற்றுக்கும் துணை செய்வதாகவோ அல்லது தொடர்புடையதாகவோ அமையவில்லை.

சருக்கங்களின் பெயர்களுக்கும் அதில் கூறப்படுகின்ற அடியார்களின் கதைகளுக்கும் சிறிது கூட இயைபு—தொடர்பு (Coherence) காணப்படவில்லை.

காப்பியத்தலைவர் என கருதப்படுகின்ற சுந்தரரின் வரலாற்றை விஞ்சக்கூடிய அளவில் மற்ற அடியார்களின் வரலாறுகள் அமைந்துள்ளன. இப்போக்கு காப்பிய அமைதிக்கு உகந்ததல்ல.

காப்பியத்தலைவர் சுந்தரர் என்று கொண்டால் அவரோடு தொடர்புடைய நாயன்மார்களைத்தவிர (விறல்மிண்டர், பெருமிழலைக் குறும்பர், கலிக்காமர், சோமாசி மாறர் கழறிற்றறிவார்) பிறநாயன்மார்களுடைய வரலாறு சுந்தரருடைய வரலாற்றை மூடி மறைக்கிற அளவுக்கு அமைந்துள்ளது.

காப்பியத்தலைவர் என்று கூறப்படுகின்றவரது சொந்த ஊரும், நாடும் முறையே நகரச் சிறப்பாகவும் நாட்டுச் சிறப்பாகவும் கூறப்படாததாலும் பெரிய புராணம் ஒரு முழுமையான கட்டுக்கோப்புடன் கூடிய காப்பியம் அல்ல என்றும், காப்பியத் தலைவர் சுந்தரர் அல்லர் என்றும் கருதலாம்.

பெரிய புராணம் காப்பியக்கூறுகள் சில பொருந்தியுள்ள புராணம் என்றும், இதன்தலைவர்கள் திருத்தொண்டர்தொகையும் அது கூறும் அடியார்களுமேயாவர் என்றும் கருதலாம்.

அ. திருத்தொண்டத்தொகை பாட சுந்தரர் பிறந்து மீளல் (திருமலைச்சருக்கம்-வெள்ளானைச் சருக்கம்), ஆ. திருத்தொண்டத் தொகை பாடப்பட்ட நாடும், நகரமும் சிறப்பிக்கப்படல், இ. திருத்தொண்டத் தொகையின் ஆசிரியர் வரலாறாகத் தடுத்தாட் கொண்டபுராணம் அமைதல், ஈ. திருத்தொண்டத் தொகையிலுள்ள ஒவ்வொரு பாடலின் முதல்சொல் (அ) சொற்றொடரை ஒவ்வொரு சருக்கத்திற்கும் பெயராகப் பயன்படுத்தியமை, உ. திருத்தொண்டத் தொகை கூறும் அடியார்களது வரலாறுகளைக் கூறுதல் ஆகியவற்றை நோக்கும்போது திருத்தொண்டத் தொகையின் வரலாற்றை மையக்கதையாகவும், அடியார்களது வரலாற்றைக் கிளைக்கதைகளாகவும் கொள்ளலாம்.

பெரிய புராணத்தைக் காப்பிய இலக்கணங்கள் அனைத்தும் பொருந்தியுள்ள முழுமையான காப்பியமாகக் கொள்ளவியலாது. பல அடியார்களுடைய வாழ்க்கையை இலக்கிய இன்பத்தோடும் பக்திச் சுவையோடும் கூறுகிற கதைத்தொகுப்பு அல்லது புராணம் அல்லது வரலாறு என்று கூறலாம். இந்நூலுக்குத் தலைமையும் தலைவரும் முறையே திருத்தொண்டத்தொகையும், அது கூறும் அடியார்களுமே யாவர் என்றும் கருதலாம்.

சிவனடியார்களின் செயற்கரிய செயல்களை, அவர்தம் வாழ்க்கை வரலாறுகளைப் புராணமாகப் பாடவந்த சேக்கிழார் பெருமான் காப்பியக் கூறுகள் சில அமைந்திருக்குமாறு பெரியபுராணத்தைப் பாடியிருப்பது அவர்தம் தனித்தன்மையை விளக்கிக் காட்டுவதற்கான சான்றாகத் திகழ்கிறது.

**உ. சேக்கிழார் காலம்:**

பெரிய புராண நூலாசிரியராகிய சேக்கிழாரது காலம் பற்றி ஆய்வறிஞர்களிடையே பல்வேறு கருத்துக்கள்

நிலவுகின்றன. சேக்கிழாரின் காலத்தைப் பல்வேறு சான்றுகள் கொண்டு நிறுவியவர் ஆராய்ச்சி அறிஞர், டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்கள்.

**சேக்கிழாரின் காலம்:**

1) முதல் இராசேந்திர சோழன் காலம் (கி.பி. 1012 – 1044) என்று சோமசுந்தர தேசிகர் (**வைசிகாமணிகள் இருவர்**, 1929) குறிப்பிடுவதாகவும்,

2) அவனுடைய பேரன் முதற்குலோத்துங்க சோழன் காலம் (1070-1120) என்று து. அ. கோபிநாதராவ் (**செந்தமிழ்**, 1905, **சோழவமிச சரித்திரச் சுருக்கம்**, 1910) பூர்ணலிங்கம் பிள்ளை **தமிழ் இலக்கிய வரலாறு**, (ஆங்கிலம் 1929) ஆகியோர் குறிப்பிடுவதாகவும்,

3) அவனுடைய பேரன் இரண்டாம் குலோத்துங்கன் காலம் (1133-1150) என்று ரா. ராகவய்யங்கார் (செந்தமிழ் 1905) அவர்களும், கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்களும் (**சோழர் வரலாறு** (ஆங்கிலம்), 1937), மு. ராகவய்யங்கார் (**சாசனதமிழ்கவி சரிதம்**, 1937), அவர்களும், மா. இராசமாணிக்கம் (சேக்கிழார், 1945), அவர்களும், சி.கே. சுப்பிரமணிய முதலியார் அவர்களும் (சேக்கிழார், 1952), ச. வையாபுரிப்பிள்ளை அவர்களும் (**காவிய காலம்**, 1957) கூறுவதாகவும்,

4) அவனுடைய மகன் இரண்டாம் இராசராசன் (1146-1163) காலம் என்று தெ. பொ. மீனாட்சிசுந்தரம் (**தமிழ் இலக்கிய வரலாறு**, (ஆங்கிலம்) 1965) அவர்கள் குறிப்பிடுவதாகவும்

5) மூன்றாம் குலோத்துங்கன் காலம் என தி.வை. சதாசிவப் பண்டாரத்தார் (**பிற்காலச் சோழர் வரலாறு** (இரண்டாம்பாகம்) 1951) கூறுவதாகவும்

மு. அருணாசலம் தனது தமிழ் இலக்கிய வரலாற்றில் குறிப்பிடுகின்றார்.[1]

சேக்கிழார் தன் காலத்தில் ஆட்சி செய்த சோழ வேந்தனைப் பத்து இடங்களில் 'அநபாயன்' என்னும் பெயரால் பெரியபுராணத்தில் சுட்டுகின்றார். அநபாயன், பேரம்பலம் பொன் வேய்ந்தான் என்று 8 ஆம் பாடலும், தில்லை திருஎல்லையைப் பொன்மயமாக்கினான் என 1218-ஆம் பாடலும் (தில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கிய) குறிப்பிடுகின்றன. தில்லையில் சிற்றம்பலம், பேரம்பலம், பொன்னம்பலம் என்ற மூன்றும் வெவ்வேறானது.

சேக்கிழார் குறிப்பிடுகின்ற 'அநபாயன்' இரண்டாம் குலோத்துங்கனே; இவன் 'அநபாயன்' எனும் பெயரைச் சிறப்புப் பெயராகக் கொண்டவன். குலோத்துங்கன் என்னும் பெயரோடு 1070-1120 வரை முதற் குலோத்துங்கனும், 1133-1150 வரை இரண்டாம் குலோத்துங்கனும் 1178-1218 வரை மூன்றாம் குலோத்துங்கனும் ஆட்சி செய்துள்ளனர். சாசனத் துறையினரால் 1901-இல் படியெடுக்கப்பட்ட 269-ஆம் எண் கொண்ட திருவாரூர்க் கல்வெட்டால் 2-ஆம் குலோத்துங்கனே அநபாயன் என்று தெளியலாம்.

ஆதித்தன், பராந்தகன், முதற் குலோத்துங்கன் விக்கிரம சோழன் ஆகியோர் சிற்றம்பலத்திற்குப் பொன் வேய்ந்தவர்கள்; இரண்டாம் குலோத்துங்கனும் இவனுக்குப் பின் வந்த மூன்றாம் குலோத்துங்கனுமே பேரம்பலத்திற்குப் பொன் வேய்ந்தவர்கள்.

கோகரணக் கல்வெட்டொன்று "பேரம்பலம் பொன் வேய்ந்த கோராசகேசரி வன்மரான திரிபுவனச் சக்கர

1. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு,** (பன்னிரண்டாம் நூற்றாண்டு), பக், 122-150.

வர்த்திகள், ஸ்ரீகுலோத்துங்க சோழர்க்கு'' என்று குறிப்பிடு கின்றது. 'இராசகேசரி' என்னும் பட்டம் கொண்டவன் 2-ஆம் குலோத்துங்கனே. 3-ஆம் குலோத்துங்கன் 'பரகேசரி' எனும் பட்டம் கொண்டவன். இதனாலும் பேரம்பலம் பொன் வேய்ந்தவன் 2-ஆம் குலோத்துங்கனே என்பது தெளிவாகிறது.

திருமழபாடி சிவாலயத்தின் இரண்டாம் பிரகாரத் தெற்கு மதிலிலுள்ள இராசராசதேவனுடைய 17 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, குன்றத்தூர்க் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனான உத்தம சோழப் பல்லவ ராயர் என்பவர், கோயிலுக்கு திருநந்தா விளக்கு வைக்க 90 ஆடுகள் உதவிய செய்தியைக் குறிப்பிடுகின்றது. இதன் மூலம் அங்கு குறிக்கப்பட்டுள்ள இராசராசன் இரண்டாம் குலோத்துங்கனது மகன் என்பது தெளிவாகின்றது. இவர் காலத்திலும் சேக்கிழார் வாழ்ந்திருக்கின்றார் என்பதை அறிய முடிகின்றது.

> இரண்டாம் இராசராசனது ஆட்சியின் இறுதியாண்டாகிய 17-ஆம் ஆண்டில் திருமழபாடி திருக்கோயிலுக்கு நிபந்தம் வழங்கிய சேக்கிழான் மாதேவடிகள் எனக் கருதப்படும் சேக்கிழார் நாயனார் அம்மன்னனது தந்தையாகிய 2-ஆம் குலோத்துங்க சோழனது ஆட்சியின் பிற்பகுதியிலும், இரண்டாம் இராசராசனது மைந்தனாகிய மூன்றாம் குலோத்துங்க சோழனது ஆட்சியின் முற்பகுதியிலும் வாழ்ந்திருந்தவர் என்று கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.[1]

மேற்கூறியவற்றால் சேக்கிழார் 2-ஆம் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் பிற்பகுதியிலும், 3-ஆம் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர் என்பது தெரிய வருகின்றது.

---

1. க. வெள்ளைவாரணன், 'பன்னிரு திருமுறை வரலாறு' (இரண்டாம் பகுதி), ப-825.

# 2. பெரியபுராணத்தில் பக்திச் சுவை

சேக்கிழார் சோழநாட்டுத் திருநாகேச்சுரத்து இறைவரைத் தன் ஆன்மார்த்த நாயகராகக் கொண்டு வழிபட்டு வந்தவர். அவர் அங்குப் பலகாலம் தங்கி பலதிருப்பணிகளும் செய்திருக்கின்றார். அவ்வூரைத் தமது அரசியல் அலுவலக இடமாகவும் வழிபடுதலமாகவும் கொண்டிருந்தார். அந்த நினைவு பற்றியே தனது ஊரில் (குன்றத்தூரில்) திருநாகேச்சுரக் கோயில் ஒன்றை அமைத்தார்.

திரிசிரபுரம் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் சேக்கிழாரைப் "பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப்பாடிய கவி வலவ" என்று சேக்கிழார் பிள்ளைத் தமிழில் குறிப்பிடுகின்றார். மேலும், அவர் சேக்கிழாரைத் "தெய்வச் சைவா" என்றும், பெரியபுராணத்தைத் "தெய்வம் மணக்கும் செய்யுளெலாம்" என்றும் குறிப்பிடுகின்றார்.

பெரியபுராணத்தில் காணப்பெறும் பக்திச் சுவையை, தெய்வம் மணக்கும் செய்யுளை ஓரிரு எடுத்துக் காட்டுகள் தந்து விளக்கும் வகையில் அமைகின்றது இக்கட்டுரை.

சேக்கிழார், சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கயிலாய மலையை வருணிக்கும்போது,

"பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது"
(திருமலைச்சிறப்பு—1)

என்று 'வெண்மையான திருநீற்றைப் பூசியிருப்பதைப் போல அம்மலை உள்ளது எனக் குறிப்பிடுகின்றார்.

மேலும், அம்மலையைக் குறிப்பிடும்போது "**புண்ணியந் திரண்டுள்ளது** போல்வது" என்றும் குறிப்பிடுகின்றார்.

"அண்ணல் பாகத்தை யாளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது"
(திருநாட்டுச்சிறப்பு—6)

என்ற பாடலில், காவிரி ஆற்றை வருணிக்கும் போது, 'இறைவியினுடைய உள்ளத்தில் பீறிட்டு எழும் கருணையின் ஒழுக்கம் போன்றது' என்று குறிப்பிடுகின்றது.

வயல்களில் செந்நெற்கதிர்கள் முற்றி, விளைந்து வளைந்திருக்கும் காட்சியை வருணிக்கும் போது, சிவனடியார்கள் பத்தி நெறியில் நின்று ஒருவருக்கொருவர் தலையினால் வணங்கிக் கொள்வது போலிருந்தது' என்று கூறுகின்றார். இதனை,

"பக்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்த நீள்பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலி யெல்லாம்"
(திருநாட்டுச்சிறப்பு—22)

என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தைப்பற்றிக் குறிப்பிடும்போது, 'துன்பம் தீர்க்கும் சிவனடியார்கள் மேனியிற் பொலியும் திருநீறுபோல் தூயதாகவும், அவர்கள் 'சிவாயநம' என எப்போதும் ஓசை எழுப்புவதால் ஆயிரம் பாற்கடல் போல் விளங்குவதாகவும் கூறுகின்றார். பாற்கடலின் வெண்மைக்கு அடியார்கள் தங்களுடைய மேனி முழுதும் பூசிய திருநீற்றையும், பாற்கடலில் எழும் பேரொ

லிக்கு அடியார்கள் எழுப்பும் 'சிவ சிவ' ஒலியையும் உவமை யாக ஆக்குகின்றார்.

அரந்தை தீர்க்கும் அடியவர் மேனிமேல்
நிரந்த நீற்றொளி யால்நிறை தூய்மையால்
பரந்த அஞ்செழுத் தோசை பொலிதலால்
பரந்த ஆயிரம் பாற்கடல் போல்வது
(திருக்கூட்டச்சிறப்பு 3)

என்ற பாடலில் குறிப்பிடுகின்றார்.

கதிரவன் மறைந்தபிறகு 'வானம் இருண்டதை' வருணிக்கும்போது, சேக்கிழார், 'சிவபெருமானின் திருஐந்தெழுத்தை உணரமுடியாத அறிவிலாதாருடைய நெஞ்சம் இருண்டு கிடப்பதைப் போல நீண்டவானம் இருண்டது' என்று

அரன் அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சும் அன்ன இருண்டது நீண்ட வான்
(தடுத்தாட்கொண்டபுராணம், 159)

என்ற பாடலில் வருணிக்கின்றார்.

நிலா முகிழ்த்ததைக் குறிப்பிடும்போது, 'திருவெண்ணீற்றின் பேரொளி போன்றிருந்தது' என்று

ஆற்ற அண்டமெலாம் பரந் தண்ணல் வெண்
நீற்றின் பேரொளி போன்றது நீள்நிலா
(தடுத்தாட்கொண்டபுராணம். 162)

என்ற பாடலில் குறிப்பிடுகின்றார்.

கிளர்ந்த திருநீற் றொளியிற் கெழுமிய நண்பகல்
(திருஞானசம்பந்தர் புராணம், 6)

என்று, திருநீற்றொளியின் வெண்மை பகல் போலத் திகழ்வதாகக் கூறுகின்றார்.

பரவை நாச்சியாரைக் கண்டு அவர்மீது காதல் மிகுந்
தெழுந்த சுந்தரர்,
கற்பகத்தின் பூங்கொம்போ? காமன் தன் பெரு
வாழ்வோ?
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ?
.......................................................................
அற்புதமோ **சிவனருளோ?**அறியேன் என்றதிசயித்தார்?
(தடுத்தாட்கொண்டபுராணம்,140)

என்று சேக்கிழார் கூறுவதும்; சுந்தரரைக்கண்ட பரவை யார் தன் மனத்தினுள் எண்ணுவதாக,

முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ? பெரு
கொளியால்
தன்னேரில் மாரனோ? தார்மார்பின் விஞ்சையனோ?
**மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற்**
**றுடையவனோ?**
என்னே! என் மனந்திரித்த இவன்யாரோ? என
நினைத்தார்.
(தடுத்தாட்கொண்டபுராணம்-144)

எனக்குறிப்பிடுவதும், காதல் நிகழ்ச்சிகளிலும் கூட பக்திச் சுவையை/இறைவனைப் பற்றிய செய்திகளைக் குழைத்துத் தரும் அவருடைய தனித்தன்மையை வியந்து போற்றுவ தாகவே உள்ளது.



# 3. சிவனடியார்களின் பண்புகள்

பிறவாயாக்கைப் பெரியோனும்—முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளுமான சிவபெரு மானைச் சிவாகமநெறிப்படி வழிபடுவோர்களும், அவன் மீது உண்மையான அன்புகொண்டு அவனையே எல்லாமாகக் கொண்டு வழிபடுவோர்களும் சிவனடியார்கள்/சைவர்கள் என்று அழைக்கப்படுவர். இவர்கள், பல்வேறு சமயங்களுக் கும் உரிய சில பொதுவான உயர்பண்புகளைத் தங்களுக்கு உரித்தாக்கிக்கொண்டு, அதோடு மட்டு மின்றித் தங்களது சைவ சமயத்திற்கேயுரிய சிறப்பான பண்புகளையும் தங்க ளுக்கு உரித்தாக்கிக் கொண்டு வாழ்வர்/வாழ்ந்திட வேண் டும்.

பட்டினத்துப் பிள்ளையார் பாடல், சிவஞானதீபப் பாடல், பதி/பசு பாச விளக்கப்பாடல், கூர்மபுராணப்பாடல், திருவிளையாடல் புராணப்பாடல், 'உபதேச காண்ட'ப் பாடல் ஆகியவற்றிலிருந்து மனிதர்கள் அனைவரும் மேற் கொண்டிட வேண்டிய/ குறிப்பாகச் சைவர்கள்-சிவனடி யார்கள் மேற்கொண்டிட வேண்டிய சில உயர்பண்புகள்/ ஒழுகலாறுகள் இக்கட்டுரையில் விரித்துரைக்கப் பெறு கின்றன.

> "கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற் குத்திரங் கோள்களவு
> கல்லாமற் கைதவரோ டிணங்காமற் கனவினும் பொய்
> சொல்லாமற் சொற்களைக் கேளாமற் தோகையர் மாயையிலே
> செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே".

என்ற பாடலில் பட்டினத்துப் பிள்ளையார் சிதம்பர தேசிகனை விளித்து, பிற உயிர்களைக் கொல்லாமலும் புலால் உண்ணாமலும், புறங்கூறுதல், களவு கற்காமலும் சிறியாரோடு சேராமலும், கனவிலும் பொய் கூறாமலும், பரத்தையர் மாயையிலே சிக்காமலும் இருக்கும்படியாக அருளுமாறு வேண்டுகின்றார்.

'சிவஞானதீபம்'-என்ற நூலும் சில உயர் பண்புகளைக் கூறுகின்றது.

கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே
கூறரிய மேலான ஞான மாகுங்
கொலையாதி யகன்றொழுகுந் தவங்க டாமே
குற்றமிலா நற்றவமென் றுரைக்கு நூலுங்
கொலையாதி யகற்றியநல் லறங்க டாமே
குவலயத்தி லொப்பரிய வறங்க ளாகுங்
கொலையாதி யகன்றுபெறுஞ் செல்வந் தானே
கூறினுயிர்க் கிதமான வாழ்வ தாமே!

(சிவஞானதீபம்)

என்று கொலை ஒழிந்த அதாவது பிற உயிர்களைக் கொலை செய்தல் ஒழிந்த அறிவே உயர்ந்த அறிவென்றும், நல்ல தவம் என்றும், நல்ல அறங்கள் என்றும், உயர்ந்த செல்வம் என்றும் குறிப்பிடுகின்றது.

எவ்வுயிரும் பராபரன் சந்நிதிய தாகு
மிலங்குமுயி ருடலனைத்து மீசன்கோயி
லெவ்வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி
யிரங்காது கொன்றருந்து மிழிவினோரை
வவ்வியமன் றூதரருந் தண்டஞ் செய்து
வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து
வெவ்வியதீ யெழுநாகில் வீழ்த்தி மாறா
வேதனைசெய் திடுவரென வோது நூலே."

(சிவஞானதீபம்)

'எல்லா உயிர்களும் இறைவனுடைய சந்நிதியாகும்; உயிர் உடல் அனைத்தும் ஈசனுடைய கோயிலாகும். எல்லா உயிர்களையும் தன் உயிர் போலக் கருதாது அவற்றைக் கொன்று உண்ணும் இழிந்தோர்களை எம தூதர்கள் இரும்பைக் காய்ச்சி அவர்களுடைய வாயில் ஊற்றிக் குடிக்கச் செய்து கொடுமையான நரகத்தில் தள்ளுவார்கள் என்று உயிர்க்கொலை செய்து புலால் உண்பவர்களை அச்சுறுத்தும் நோக்கில் திருத்த முற்படு கின்றது மேற்குறித்தப்பாடல்.

'பிற உயிர்கள் அலறும்படியாக அவற்றைக் கொன்று உண்டவர்கள் எல்லாம் இன்புற்று மகிழ்வாக இருக்கின்றார் கள், என்ற **சத்தத்தைக் கேட்ட உயர்தவத்தை உடைய வர்க்கே** நரகம் கிட்டும் என்றால், உண்டவர்களுக்கு எத் தகைய கொடுமையான நகரம் கிட்டும் என்பதைக்கூறாமற் கூறுகின்றது பின்வரும்பாடல்:-

அம்மா வெனவலர வாருயிரைக் கொன்றருந்தி
யிம்மா னுடரெல்லா மின்புற் றிருக்கின்றா
ரம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்ம்மா நிரயமென்றாற் புசித்தவர்க் கென்
சொல்லுவதே
(பதிபசுபாசவிளக்கம்)

'புலால் உண்போன் கங்கையில் மூழ்கினாலும் கடவுளை வணங்கினாலும், வறியோர்க்கு வள்ளல்போல் வாரிவழங்கினாலும், உயர்தத்துவ ஞானத்தை உணர்ந் திருந்தாலும் அவன் நிச்சயம் நரகத்தையே அடைவான்' என்பதை

கங்கையிற் படிந்திட்டாலுங் கடவுளைப் பூசித் தாலு
மங்குல்போற் கோடி தானம் வள்ளலாய் வழங்கி
னாலுஞ்

*சங்கையிலாத ஞான தத்துவ முணர்ந்திட் டாலும்*
*பொங்குறு புலால் புசிப்போன் போய்நர கடைவ*
*னன்றே*
*(பதிபசுபாசவிளக்கம்)*

என்றபாடல் புலால் உண்ணுதலினால் உண்டாகும் கொடிய தன்மையை எடுத்துரைக்கின்றது.

'கொல்லாமையை மேற்கொண்டொழுகுபவன் அளிக்கும் உணவு அமுதத்தை ஒக்கும் என்றும்; கொலைத் தொழிலை மேற்கொண்டொழுகுபவன் அளிக்கும் உணவு விடத்தை நிகர்க்கும் என்றும், புலையர்கள் இல்லத்தில் உண்பவர்கள் புலையர்களாவது போல் கொலைஞர்கள் இல்லத்தில் உண்பவர்களும் கொலைஞரே என்று கொல் லாமையை,

*கொலையிலா னுதவு மன்னங் கூறிற்பே ரமுத மாகுங்*
*கொலையுளா னுதவு மன்னங் கூறிற்பேர் விடமதாகும்*
*புலையர்த மனையி லுண்போன் புலையனா*
*மாறுபோலக்*
*கொலைஞர்த மனையி லுண்போன் கொலைஞனே*
*யாவனன்றே (பதிபசுபாச விளக்கம்)*

என்ற பாடல் வலியுறுத்தக் காணலாம்.

கள்ளருந்துவதால் உண்டாகும் தாழ்வை-இழிவைக் கூறி கள்ளுண்ணாமையை வலியுறுத்தும் போக்கில் அமைந்துள்ள,

*கள் விலை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர்*
*கள்ளருந்துதற்குடன் படுவோர்*
*கள்ளருந்துநரை மகிழுநர் நரகிற் கற்பகா லங்கிடந்*
*தழுந்தி*

வெள்ளுருந் தீய மலப்புழுவாகி மலத்தினை நுகர்ந்து
பின் னிறந்து
விள்ளருங் கொடிய ரௌரவ நரகின் மீட்டுமீட்டுழந்து
நாள் கழிப்பர் (கூர்மபுராணம்)

பாடல் குறிப்பிடத்தக்கது.

மிகுந்த காமமே கொலை, களவு, கள்ளுண்ணல் போன்ற குற்றங்களுக்கெல்லாம் காரணம். எனவே, மிகுந்த காமத்தை ஒழிக்க வேண்டுவதன் அவசியத்தை,

காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்
ணோடாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாதலாலே
காமமே நரகபூமி காணியாக் கொடுப்ப தென்றான்
(திருவிளையாடற்புராணம்)

என்ற பாடல் குறிப்பிடுகின்றது.

மேற்கூறப்பட்டப் பாடல்களின் வழி கொல்லாமை, புலால் உண்ணாமை, கள்ளுண்ணாமை, பிறர் மனை நயவாமை, கழிகாமம் கொள்ளாமை போன்ற பண்புகளை எல்லாச் சமயத்தவர்களும் மேற்கொண்டொழுக வேண்டிய உயர் பண்புகளாகக் கொள்ளலாம்.

**சிவனடியார்களின் சிறப்பிலக்கணம்**

சிவனடியார்களுக்கு / சைவர்களுக்கு உரிய சிறப்பிலக்கணங்களை **'உபதேசகாண்டம்'** மூவகைப்படுத்திக் கூறுகின்றது.

**புறத்திலக்கணம்**

சிவனடியார்களின் / சைவர்களின் புறத்தோற்றம் பற்றியனவே புறத்திலக்கணமாகும். இது பத்து செயல்களைக் கொண்டுள்ளது.

வாசப் பூதி யுருத்திர மாமணி
பூசிப் பூணல், குரவரைப் பூசித்த
லாசைப் பாட்டி னரனைப் புகழுத
லீசற் குள்ளன நாம மியம்புதல்

(உபதேச காண்டம்)

என்ற பாடல், 1) விபூதி, உருத்திராக்கம் என்னும் சிவசின்னங்களைத் தரிக்கவேண்டும், 2) குருவை வழிபடுதல் வேண்டும், 3) சிவபெருமானைப் பாட்டினால் புகழுதல் வேண்டும், 4) சிவபெருமானுடைய திருநாமங்களை உச்சரித்திடல் வேண்டும் என்று கூறுகிறது.

எந்தை யீச னருச்சனை யோம்புத,
றந்தி ரச்சிவ தன்மம் புரிகுதன்,
முந்தை யோன்கதை கேட்டல், முறைமையாற்
புந்தி கூர்ந்தர னாலயம் போற்றுதல்

(உபதேசகாண்டம்)

என்ற பாடல், 5) சிவபெருமானைப் பூசிக்கவேண்டும், 6) சிவதருமங்களைச் செய்திடல் வேண்டும், 7) சிவபுராணங்களைக் கேட்கவேண்டும், 8) சிவாலயங்களைத்தரிசனம் செய்திடல் வேண்டும் என்று கூறுகின்றது.

ஒத்த பத்த ரிடத்தல தோரிடந்
துய்த்த லீத்தலத் தொண்டரிற் றொண்டராய்ச்
சித்த மன்புற வீதன்முன் செப்பிய
பத்து மீங்கிவை காணப் படுதிரால்

(உபதேச காண்டம்)

என்ற பாடல், 9) சிவனடியார் அல்லாதாரிடத்து உணவு உட்கொள்ளல் கூடாது, 10) சிவனடியார்களுக்கு அன்பு மீக்கூர பொருள் கொடுத்து உதவுதல் வேண்டும் என்று குறிப்பிடுகின்றது.

**உடலிலக்கணம்**

சைவர்கள்/சிவனடியார்களுக்கு உரிய உடலிலக்கணங்களாக, 1) சிவபெருமானுடைய பெருமையைப் பேசுந்தோறும் சிந்திக்குந்தோறும் கண்டம் விம்முதல், 2)நாக்குத் துடித்தல், 3) உதடு துடித்தல், 4) சரீரம் நடுங்குதல், 5) உரோமம் சிலிர்த்தல், 6) குறு வியர்வை கொள்ளல் 7) நாக்கு தழுதழுத்தல், 8) ஆனந்தக் கண்ணீர் சொரிதல், 9) வாய் விட்டு அழுதல், 10) பரவசமாய்த் தன்னை அயர்த்தல் ஆகிய பத்தையும் உபதேசகாண்டம். குறிப்பிடுகின்றது.

**அகத்திலக்கணம்**

சைவர்கள்/சிவனடியார்களுக்குரிய அகத்திலக்கணங்களாக, 1) திரு ஐந்தெழுத்தை (சிவாயநம) மாதைமாகச் செபித்தல், 2) மாதை பூசை, 3) சிவ பெருமானைத் தன்னோடு பிரிவறக் காணுதல் என்ற மூன்றையும் 'உபதேச காண்டம்' குறிப்பிடுகின்றது.

சேக்கிழார் பெரியபுராணத்தில் 'திருக்கூட்டச் சிறப்பு' என்னும் பகுதியில் குறிப்பிடும் சிவனடியார் பற்றிய செய்திகளை அடியார்களது இயல்புகளாகவும் பண்புகளாகவும் தோற்றப் பொலிவாகவும் கொள்ளலாம்.

சிவனடியார்கள் இறைவன் மீது கொண்ட அன்பினால் உடல் தழைந்து விதிர்புறும் சிந்தையை உடையவர்கள்-மெய்த்தொண்டியற்றும் கடமையை உடையவர்கள் என்பதை,

> ... ... .... ... ... ... ... ... ... .... .... .... ...அன்பினால்
> மெய்த்த ழைந்து விதிர்ப்புறு சிந்தையார்
> கைத்தி ருத்தொண்டு செய்கடப் பாட்டினார்
>
> (திருக்கூட்டச் சிறப்பு, 5)

என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

குற்றமற்ற தங்களது திகழ்கின்ற மேனிமீது பூசுகின்ற வெண்மையான திருநீறுபோல உள்ளமும் வெண்மையான வர்கள் (புனிதமானவர்கள்/தூயவர்கள்). பேசுதற்கியலா தப் பெருமைகளை உடையவர்கள் என்பதை,

*மாசி லாத மணிதிகழ் மேனிமேல்*
*பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்*
*தேசினால் எத் திசையும் விளக்கினார்*
*பேச ஒண்ணாப் பெருமை பிறங்கினார்*

(திருக்கூட்டச் சிறப்பு, 6)

என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

ஐம்பெரும் பூதங்களும் தத்தம் நிலையில் திரிந்தாலும் சிவபெருமானின் திருவடித்தாமரைகளை மறக்காதவர்கள். இறைவன் மீது மிகுந்த அன்பு வயப்பட்டவர்கள். குற்ற மில்லாத குணக்குன்று போன்றவர்கள் என்பதை,

*பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும்*
*மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்*
*ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார்*
*கோதி லாத குணப்பெருங் குன்றனார்*

(திருக்கூட்டச் சிறப்பு-7)

என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

அழிவும் ஆக்கமும் கெட்ட திருவினை உடையவர்கள். மண்ணால் ஆன ஓட்டை எவ்வாறு துச்சம் எனக் கருது வார்களோ அவ்வாறே செம்பொன்னையும் கருதும் மனம் படைத்தவர்கள். உள்ளத்தில் மிக்கெழும் மிகுந்த அன்போடு இறைவனைக் கும்பிடுவது/ வழிபடுவது தவிர வேறு எதை யும் விரும்பாத / வேண்டாத மனம் படைத்தவர்கள் என்பதை,

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.

(திருக்கூட்டச் சிறப்பு-8)

என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

மார்பில் அணியும் ஆரமாகக் கண்டிகையையும் உடுத்தும் ஆடையாகக் கந்தலையும் உடையவர்கள் பெருமானுக்குச் செய்யும் பணியைத் தவிர பிறிதொன்றைச் செய்தறியாதவர்கள். இரக்கம் கலந்த அன்பினை உடையவர்கள். யாதொரு குறைவும் இல்லாதவர்கள் என்பதை,

ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரம் ஈசன் பணிஅல தொன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்

(திருக்கூட்டச் சிறப்பு-9)

என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

வேண்டும் வடிவை எடுக்கவல்லவர்கள் என்பதை வேண்டுமாறுவிருப்புறு வேடத்தர்'(திருக்கூட்டச்சிறப்பு 10) என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு, சிவனடியார்களிடம் காணப்படும் பொதுப் பண்புகளைச் சேக்கிழார் பெரியபுராணத்தில் குறிப்பிடுகின்றார்.



# 4. சிவனடியார்களின் சீரிய வாழ்வு

தில்லைக் கூத்தனின் திருவடித்தாமரைகளை வாழ்த்தி வழிபடும் நலத்தின் மிக்கவர் **திருநீலகண்டர்**. அடியார் பணிகளை விருப்பமுடன் செய்து வந்தவர். சிவனடியார் களுக்கு இலவசமாகத் திருவோடு செய்து கொடுத்து சிவ னடியார்தொண்டு செய்து வந்தவர்.

பெருமானுக்கு அடிமையாகவே திகழ்ந்தவர் **இயற் பகையார்**. இவர் அடியார்கள் வேண்டியனவற்றை இல்லை யென்னாது கொடுத்து உதவியவர்.

அம்பலத்துள்ளாடும் பெருமானின் திருவடிகளைமுடி மீது சூடுபவர். **இளையான்குடி மாறர்**. இறைவனுக்கு அடிமையாகவே திகழ்ந்தவர். அடியார்களை வணங்கி உப சரித்தவர்.

மாதொருபாகனாகிய பெருமானிடம் மிகுந்த அன்பு கொண்டவர் **மெய்ப்பொருளார்**. பெருமானுடைய திருக் கோயில்களில் பூசனைகளும். ஆடல்பாடல்களும் நிகழ்ந்து வர ஏற்பாடுகள் செய்தவர். சிவனடியார்களுக்கு வேண்டிய பொருட்களை மகிழ்ச்சியோடு கொடுத்து உதவியவர்.

பெருமானுடைய கழல்களையே இதயத்தில் பற்றுக் கோடாகக் கொண்டவர் **விறன்மிண்டர்**. பிற பற்றுகளை ஒழித்தவர். அடி யார்களிடம் பரிவு கொண்டவர்.

சிவபெருமானின் திருவடிகளையே சிந்தை செய்தவர் **அமர்நீதியார்** சிவனடியார்களுக்கு உணவளித்து கந்தை' நீள், உடை, கோவணம் ஆகியவற்றை அவர்களது கருத் தறிந்து கொடுத்து உதவியவர்.

'ஆனிலை' கோயிலிலுள்ள பெருமானை வழிபடும் தொழிலையுடையவர் **எறிபத்தர்**.

அழலவிர் சடையான்அன்பர்க் கடாதன அடுத்தபோது
முழையரி என்னத் தோன்றி முரண்கெட எறிந்து தீர்க்கும்
……… … … … … …தூய பரசுமுன் எடுக்கப்பட்டார்.[1]

என்று சேக்கிழார், எறிபத்தரை, சிவனடியார்களுக்கு ஆபத்து ஏற்பட்டபோது, குகையிலிருந்து வெளிப்படும் சிங்கம் போலத் தோன்றி அவ் ஆபத்தைத் தடுத்திடு பவர்; கையில் பரசை உடையவர் எனக் குறிப்பிடுகின்றார்.

நீறு பூசிய திருமேனியோடு வழிபாடாற்றியவர் **ஏனாதிநாதர்**. இவர், போர் செய்து ஈட்டிய செல்வத்தை யெல்லாம் அடியார்களுக்கே உரித்தாக்கியவர்.

திருக்காளத்தி நாதரிடம் அன்பு கொண்டவர் **கண்ணப்பர்**. பெருமானிடம் அன்பு கொண்ட ஆறே நாளில் தன்னுடைய கண்ணைப் பிடுங்கிப் பெருமானுக்கு வைத்த பக்திப் பெருந்தகையர்.

"நாளாறில் அன்பு செய்து கண்ணிடந்து அப்பவல்லேன் அல்லேன்" என்று பட்டினத்தடிகளால் வியக்கப்பட்டவர்.

பெருமானுடைய திருவடிகளையே இதயத்தில் பேணிய வர் **கலய** நாயனார். பெருமான் மீது கொண்ட அன்பி னால் உருகிய சிந்தையை உடையவர். பெருமானுக்கு நாள்தோறும் குங்கிலியத் தூபம் போடுவதைத் தொண் டாக உடையவர்.

உண்மைப் பொருளாம் சிவத்தை அறிந்து உணர்ந்த வர்; பணிவான வடிவினை உடையவர் **மானக்கஞ்சாறர்**

1. பெரியபுராணம், 'எறிபத்த நாயனார் புராணம்', 7

பெருமானுடைய தொண்டர்களுக்கு ஏவல் செய்யும் தொழிலையுடையவர். அடியார்கள் கூறுவதன் முன் அவர் தம் குறிப்பறிந்து கொடுத்து வந்தவர்.

பெருமானுடைய மலரடிகளை மனத்தில் பற்றுக் கோடாகக் கொண்டவர் **அரிவாட்டாயர்**. பெருமானுக்கு நாள்தோறும் செந்நெல்லரிசிச் சோற்றுடன் செங்கீரை, மாவடு ஆகியவற்றால் அமுது செய்வித்தவர்.

மெய், வாய், மனம் ஆகிய மூன்றினாலும் பெருமானுடைய திருவடிகளையே பேணியவர் **ஆனாயர்**. திருநீறு பூசிய மேனியையுடையவர்.

பெருமானுடைய திருவடித் தாமரைகளையேயன்றி பிறவற்றைப் பற்றாகக் கொள்ளாதவர் **மூர்த்தியார்**. பெருமானுக்குச் சந்தனக் காப்பு இடும் பணியை முட்டுப் படாது செய்து வந்தவர். பெருமான் திருவருளால் திடீரென அரசராகும் பேறு பெற்றவர்.

பெருமானுடைய திருவடிகளையே நினைந்து மிகுந்த அன்பால் உருகுகின்ற மனத்தை உடையவர் **மிருகநாயனார்** பெருமான் திருச்சடையில் அணிவிப்பதற்காக நாள் தோறும் திருப்பள்ளித் தாமம் பறித்துச் சாத்தியவர். அரன் அய்ந்தெழுத்தை இடைவிடாது ஓதும் நாவினை உடையவர்.

இறைவனது மலர்ச்சேவடிகளை வாழ்த்தும் தூய அன்போடு, வேத நெறிப்படி பெருமானை வழிபட்டவர்

**உருத்திர பசுபதியார்.**

குளிர்ந்த தாமரைப் பொய்கையுட் சென்று, கழுத் தளவு நீரில் நின்றுகொண்டு, கரங்களிரண்டையும் உச்சி மேற்குலத்துப் பெருமானிடம் கொண்ட அன்பினால் உருத்திரம் குறிப்போடும் பயின்றவர்.

பிறந்து உணர்வு தொடங்கிய நாள்முதலாகப் பெருமானையே மிகுந்த அன்போடு சிந்தை செய்தவர், மறந்தும் வேறு நினைவே இல்லாதவர் **நந்தனார்**, பெருமானின் திருக்கோயில்களில் பயன்படும் இசைக் கருவிகளுக்குத் தேவையான 'தோலை'யும் பெருமானுடைய அர்ச்சனைக்குத் தேவையான கோரோசனையையும் அளித்து வந்தவர். பெருமானுடைய திருக்கோயிலின் வாயிற் புறத்தே நின்று பெருமான் மீது கொண்ட பேரன்பின் மிகுதியினால் ஆடுவதும் பாடுவதுமாய்த் திகழ்ந்தவர்

மனம், மொழி, மெய் ஆகிய மூன்றையும் பெருமானின் திருவடித்தாமரைகளுக்கே உரித்தாக்கியவர் **திருக்குறிப்புத் தொண்டர்.** அடியார்களின் திருக்குறிப்பினையறிந்து போற்றியவர். அதனால் திருக்குறிப்புத்தொண்டர் எனப் பெயர்பெற்றவர்.[2]

"அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங்கழலே" என உணர்ந்தவர் **விசாரசடுமனக்ர் (சண்டேசுவரர்).** அதையே சிந்தை செய்தவர். பசுவின் பெருமைகளை உள்ளபடியேஅறிந்து, பசுக்கூட்டங்களை மேய்க்கும் பணியைச் செய்து வந்தவர்[1]

பெருமானையே பற்றுக் கோடாகக் கொண்டு, அவனைப் பாமாலைகளால் அர்ச்சித்தவர். தலயாத்திரை மேற்கொண்டு ஓவ்வொரு சிவாலயத்திற்கும் சென்று பெருமானை வழிபட்டவர். பெருமானது திருவருளால் பல அற்புதங்களை நிகழ்த்தியருளியவர். பெருமானால் 'நாவுக்கரசர்' என்றும், ஞானசம்பந்தரால் 'அப்பரே' என்றும் சமணர்களால் 'தருமசேனர்' என்றும் பட்டம் சூட்டப் பெற்றவராகிய **மருள் நீர்கியார்.**

---

1. பெரியபுராணம் சண்டேசுர நாயனார் புராணம், 15

சுந்தரரால் 'பெருநம்பி' என்று பாராட்டப்பட்டவர் **குலச்சிறையார்.** பாண்டியன் நின்ற சீர் நெடுமாறனின் அமைச்சர். சிவனடியார்களின் திருவடிகளில் அன்புடன் வீழ்ந்து, கைகூப்பி, இன்மொழிகூறி, மிகுந்த அன்போடு நட்புக்கொண்டு, அவர்களுக்கு அமுதூட்டும் செய்கையை உடையவர்.

"இலகு செஞ்சடை யார்க்கடி யாரெனில்
தலமு றப்பணிந் தேத்தும் தகைமையார்"[1]

என்று சேக்கிழார், இவர் அடியார்களைப் பணிந்து வணங்கி வரவேற்றதைக் குறிப்பிடுகின்றார்,

குறியின் நான்கு குலத்தின ராயினும்
நெறியின் அக்குலம் நீங்கின ராயினும்
அறிவு சங்கரற் கன்பர் எனப்பெறில்
செறிவு றப்பணிந் தேத்திய செய்கையார்[2]

என்று, சேக்கிழார், 'எச்சாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் பெருமானுக்கு அன்பராக இருப்பார்களாயின் அவர்களைப் பணிந்து வணங்கியவர்' என்று குலச் சிறையாரைக் குறிப்பிடுகின்றார்."ஆவுரித்துத்தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் கடைக்கரந்தார்க்கு அன்பராகில் அவர்கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே" என்ற அப்பரடிகளின் திருவாக்கு ஈண்டு நினைவு கூரத்தக்கது.

உமையாள் கேள்வனுடைய தாமரைத் திருவடிகளை இதயமலரில் வைத்துப் போற்றும் பொற்பினையுடையவர் **பெருமிழலைக் குறும்பர்.** சிவனடியார்க்கான பணிகளை' இன்ன வண்ணம் என்று அவர்தாம் உரையா முன்னம் உணர்ந்து செய்யும் பண்பினையுடையவர். தொண்டர்

---

1. பெரியபுராணம் குலச்சிறை நாயனார் புராணம், 5
2. பெரியபுராணம் குலச்சிறை நாயனார் புராணம், 4

பலருக்கும் உணவளித்து, அவர்கள் கொண்டு செல்ல இரு நிதியமும் நாள்தோறும் அளித்து வந்த பெருந்தகைமையர்.

புனிதவதியார் எனும் பெயரையுடைய **காரைக்காலம் மையார்** சிறு வயதிலேயே '**விடையவர்பால் அல்கிய அன்புடன்** அழகின் கொழுந்து எழுவதென்ன' வளர்ந்தவர். திருமணத் திற்குப் பின், தனது கணவனால், தன்னிடம் மிக்கிருந்த தெய்வத் தன்மையின் காரணத்தினால் புறக்கணிக்கப் பட்டப்பின், பெருமானை வேண்டித் தன்னுடைய அழகிய இளமைக் கோல வடிவை ஒழித்து விட்டுப் பேயுருவம் வேண்டிப் பெற்றுக் கொண்டவர். தலையாலேயே திருக்கயி லாயம் நோக்கி நடந்து சென்று பெருமானையும் அம்மை யையும் தரிசித்தவர். பெருமானால், 'அம்மையே' என்ற ழைக்கப்பட்ட பெருமைக்குரியவர். பேய் வடிவம் பெற்ற போது பெருமானைப்புகழ்ந்து 'அற்புதத்திருவந்தாதி, பாடியவர். திருக்கயிலாயம் செல்லும் முன் 'இரட்டைமணி மாலை, அற்புதத்திருஅந்தாதி' பாடியவர்.

அந்தணரின் மேம்பட்ட **அப்பூதி அடிகளார்** தாண்டவம் புரியவல்ல தம்பிரானுக்கு அன்பர். எல்லையிலாத் தவத்தை உடையவர். நாவுக்கரசரின் திருவடிகளை அவரை அது வரைக்காணாமற் போனாலும்கூட பற்றுக்கோடாகக் கொண்டவர். அவர்பால் மிக்க அன்புடையவர். கோப் பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் போல. தனது மக்க ளுக்கும், தான் செய்த எல்லா அறச்செயல்களுக்கும் 'திரு நாவுக்கரசர்' என்ற திருநாமத்தையே சூட்டி மகிழ்ந்தவர்.

ஆலம் (ஆலகால விஷம்) வைத்த கண்டத்தவருக்கு அன்பர் **நீலநக்கர்.** நான் மறைப் பொருள் விளங்கிய நலத்தையுடையவர். ஆகமநெறிப்படி நாள்தோறும் பெரு மானை வழிபட்டவர். அடியாருக்கு அமுது செய்வித்தவர். அடியார்களுக்குத் தேவையான எத்திறத்துப் பணிகளா

னாலும் ஏற்று எதிர் செய்யும் பண்புடையவர். பெருமானையும் அவரது அடியார்களையும் மிகவும் விரும்பி அவர்களது பாதங்களை அர்ச்சனை செய்வதையும், பணிவதையுமே வாழ்வாகக் கொண்டவர்.

இவர், பெருமானை வழிபாடாற்றிக் கொண்டு பூசை செய்யும்போது சிலந்தி ஒன்று பெருமான் மீது விழ, அதனைக் குழந்தைமீது விழும் சிலந்தியை நோக்குவது போல மிகுந்த அன்போடு ஊதிநீக்கினார், அருகிலிருந்த அவரது மனைவியார். மனைவியரது செயலை (பெருமான் மீது வாயால் ஊதிச் சிலந்தியைப் போக்கிய செயல்) அநுசிதம் என்று கருதிய நீலநக்கர், அவரை விட்டு விட்டு அகன்றிடவும் எண்ணிய தீவிர சிவபக்தியை உடையவர்.

'தொண்டர்க்கு ஆணி' என்று திருநாவுக்கரசரால் குறிப்பிடப்பட்டவர் **நமிநந்தியடிகள்.** பெருமானுடைய திருவடிகளை வழிபட்டொழுகும் பணியை உடையவர். திருவாரூர்ப் பெருமானை நாள்தோறும் வணங்கி வழிபட்டவர். பெருமான் கோயிலுக்குத் தீபம் ஏற்ற எண்ணி, மாலையில் ஓர் இல்லத்திற்குச் சென்று தீபம் ஏற்றிட எண்ணெய் கேட்க (அது சமணர் வீடு) அங்கிருந்த சமணர்கள் நெய்தரமறுத்து; 'விளக்கெரிக்க விரும்பினால் தண்ணீரைக் கொண்டு எரியும்' என்று எள்ளி நகையாடினர். அவர் பெருமானிடம் முறையிட்டு வருந்தவே, பெருமான் அசரீரியாகத் 'திருக்குளத்தின் நீரால் தீபம் ஏற்றிடுமாறு கூறியருளிட, அவரும் திருக்குளத்தின் நீரை முகர்ந்து கொண்டு வந்து அதனால் தீபமேற்றி வழிபட்டார். அத்திரு விளக்கும் விடியும் வரை நின்றெரிந்தது. இவ்வாறு பணி செய்து வந்தவர் நமிநந்தியடிகள்.

வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறை விளங்க, பூதபரம்பரை பொலிய, பரசமய தருக்கொழிய, சைவ

முதல் வைதீகம் தழைத்தோங்கிட, திசையனைத்தின் பெருமையெல்லாம் தென்திசையே வென்றிட, மேலுலகை யும் கீழுலகையும் புவியுலகே வெற்றி கொண்டிட, செழுந் தமிழ் வழக்கு பிறவழக்கை வெல்ல திருஅவதாரம் செய்த வர் **திருஞானசம்பந்தர் பெருமான்.**

சிறுவய்திலேயே உமையம்மையால் திருமுலைப்பால் ஊட்டப்பெற்றவர். அதனால் பெருமான் அருளால் அவன் புகழைப் பாடும் ஆற்றல் பெற்றவர். சிவாலயங்கள்தோறும் சென்று பெருமானை வழிபட்டு அவனுக்குத் தமிழ்ப் பாமாலைகளைச் சூட்டியவர். மதுரையில் அனல் வாதம் புனல் வாதம் நிகழ்த்திப் பாண்டிமண்டலத்தில் சமணத்தை ஒழித்துச் சைவத்தை நிலைநிறுத்தியவர். பெருமானரு ளால் பல அற்புதங்களையும், அருளிச் செயல்களையும் நிகத்தியவர்.

'நிதியமாவன நீறுகந்தார் கழல்' என்று உணர்ந்து பெருமானைத்துதித்து அவரது திருவடிகளையே நிதியமா கக் கொண்டவர் **ஏயர்கோன் கலிக்காமர்** திருப்புண்கூர் திருக்கோயிலுக்கு அனேக திருப்பணிகள் செய்தவர். சிவ னடியார்களைச் சார்ந்து, மிகுந்த அன்போடு அவர் கூறும் பணிகளைச் செய்து ஒழுகியவர்.

திருவாரூர்ப் பெருமான் திருவடிகளைப் பரவிப் போற் றும் நெறிநின்றவர் **தண்டியடிகள்.** இவர் பிறவிக்குருடர். திருவாரூர்க் கோயிலின் மேற்குப் பக்கத்தில் தீர்த்தக் குளத்தினைச் சுற்றிச் சமணர்கள் எங்கும் பாழிகள் அமைத் திருந்தனர். அவ்விடம் குறைந்து போனதை அறிந்த தண் டியடிகள், குளம் பெருகுவதற்காக அப்பாழிகளைக்கல்ல வேண்டும் எனவிரும்பினார். குழிவாயில் குறிநட்டுக் கட் டும் கயிற்றைக் குளத்தின் அடுத்தப்பக்கத்தில் நடுத்தறி யோடு இசையக்கட்டி, இடையே கைகளால் தடவிக்

கொண்டே வந்து மண்ணைக் கல்லி எடுத்தார். சமணர்கள் அவரைப் பழித்துக்கயிற்றையும் அறுத்துப்போட்டனர். தண்டியடிகள் பெருமானை வேண்ட அவர் கண் கொடுத்து உதவினார். சமணர்கள் தங்களது கண்களை இழந்து தவித்தனர்.

ஊனக்கண் பார்வையை உடைய பலர், திருவாரூர்த் திருக்குளத்தைப் பெருக்கவேண்டி மண்ணைத் தோண்டி எடுக்க முன்வராத நிலையில், கண்பார்வையே இல்லாத தண்டியடிகள் அச்செயலை செய்த திறம் போற்றுதற்குரியது.

தண்டியடிகளுடைய ஞானக்கண் திறத்தைக் குறிப்பிட வேண்டியே, சுந்தரர் அவரை ஊனக்கண் இல்லாது போனாலும் கூட **''நாட்டமிகுதண்டி''**-என்று குறிப்பிடுகின்றார்.

பெருமானுடைய திருநீற்றின் அடைவே பொருள் எனக் கொண்டு வாழ்ந்தவர் **மூர்க்கர்**. சிவனடியார்களுக்கு அமுதாக்கி அதை அவர்களை உண்பிக்கச் செய்து, தான் பின் உண்ணும் வழக்கத்தை நியதியாகக் கொண்டவர். அடியார்கள் வேண்டும் பொருட்களை நாள்தோறும் வழங்கி இன்புற்றவர்.

தூய அடிசில் நெய் கன்னல் சுவையின் கறிகளவை
அமைத்து
மேய அடியார் தமைப்போற்றி விருப்பால் அமுது
செய்வித்தே
ஆய பொருளும் அவர்வேண்டும் படியால் உதவி
அன்புமிக
ஏயு மாறு நாடோறும் இளைய பணிசெய்,
தின்புற்றார்.

---

1. பெரியபுராணம் மூர்க்க நாயனார் புராணம், 4

என்று சேக்கிழார் குறிப்பிடுவதால் மூர்க்கர் அடியாரை ஓம்பிய சீரிய வாழ்வுத்திறம் விளங்குகின்றது.

'வாழும் திறம் ஈசன்மலர்க்கழல் வாழ்த்தல்'[1] என்பதைக் குறிக்கோளாகக் கொண்டவர் **சோமாசிமாறர்** சித்தம் தெளியச் சிவன் அய்ந்தெழுத்தை (சிவயநம) ஓதும் வாய்மையை நித்திய நியமமாகப் போற்றும் நெறியினர். உலகம் நலமுடன் திகழ பெருமானைப் போற்றும் யாகங்கள் பல செய்தவர். எத்தன்மையினராயினும் ஈசனுக்கு அன்பராகில் அத்தன்மையர்தான் நம்மையாள்பவர் எனும் கருத்துடையவர். பெருமானுடைய அடியார்களைப் பாதம் பணிந்து அமுதூட்டும் பண்பில் நின்றவர்.

எல்லாம் வல்ல பொருள் 'சிவன்' என்பதை அவனருளால் அறிந்து உணர்ந்தவர் **சாக்கியர்,** "எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னிய சீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்"[2] என வாழ்ந்தவர். சாக்கிய கோலத்தோடு பெருமானை (கல்லால் எறிந்து) வழிபட்டவர்.

'புவனத்துள்ளோர், இன்மையால் இரந்து சென்றோர்க்கு இல்லை என்னாதே ஈயும் தன்மையார்' என்று, ஞானசம்பந்தரால் பாராட்டப் பெற்றப் பெற்றிமையையுடையவர் **சிறப்புலியார்.** நாளும் திருஅய்ந்தெழுத்தோதி, அக்கினி வளர்த்து, வேள்விகள் பல செய்தவர். ஈசனடியார்களுக்கு இனியனகூறி, நாளும் நல்அமுதூட்டி, விரும்பியனவெல்லாம் நல்கியவர்.

தென்னி வடித்தறிந்த பொருள் சிவன் கழலிற் செறிவென்றே உணர்ந்து பெருமானிடம் பக்திமை கொண்டவர்

---

1. பெரியபுராணம் நாயனார் புராணம், 2
2. பெரியபுராணம் சாக்கிய நாயனார் புராணம், 6

**பரஞ்சோதியார்**. ஈசனடியார்களுக்கு நாள்தோறும் இயல்பான பணிகள் செய்து கொண்டே மன்னனிடம் சேனைத் தலைவராய்ப் பணியாற்றியவர். ஈசனடியார்களை முகமன் கூறி வரவேற்று அவர்களை உபசரிக்கும்போது தன்னுடைய உடலைச் சிறியதாக ஆக்கிக்கொண்டு மிகவும் பணிவோடும் அடக்கத்தோடும் காணப்பட்டார். ஆதலின் **சிறுத்தொண்டர்** என அழைக்கப்பட்டார்.

நறைஇகழித் திருமுடியார் அடியாரை நாடோறும்
முறைமையினில் திருவமுது முன்னூட்டிப்
பின்னுண்ணும்
நிறையுடைய பெருவிருப்பால் நியதியாகக் கொள்ளும்
................................................ தூயதொழிற் றலைநின்றார்.

என்று சேக்கிழார், சிறுத்தொண்டர் நாள்தோறும் அடியார்களை முன்னூட்டிப் பின்னுண்ணும் வழக்கத்தைக் கொண்டிருந்ததைக் குறிப்பிடுகின்றார்.

மண்மேற் சைவ நெறி வாழ, பெருமானுடைய திருவடிகளையே பேணும் கருத்தினராய் அரசராய் விளங்கியவர் **கழறிற்றறிவார்** (சேரமான் பெருமாள்), 'உலக இயல்பும் அரசியல்பும் உறுதியல்ல' என்று உணர்ந்து ஆன்மீகத் தொண்டில் ஈடுபட்டவர். நாள்தோறும் அதிகாலையில் எழுந்து, புனல் மூழ்கி, திருநீறுபூசிக்கொண்டு, நந்தவனத்திற்குச் சென்று மலரும் முகையும் கொண்டு வந்து திருமாலைகட்டி, திருமஞ்சனநீர் கொண்டு வந்து திருவலகும் திருமெழுக்கும்இட்டு, அன்புடன்சாத்திமகிழ்ந்தவர். எல்லா உயிரும் மகிழும் தரும நிலைமையை அறிந்து அதன்படி ஆட்சி செய்தவர். இவர் சிவபூசை செய்யும்போது பெருமான் நாள்தோறும் தமது பொற்பார் திருப்பாதச் சிலம்பொலியை அளித்து வந்தார். சுந்தரரோடு பல ஊர்களுக்

1. பெரியபுராணம் சிறுத்தொண்ட நாயனார் புராணம், 13

குச் சென்று பெருமானைத் தரிசித்து வந்தார். தில்லைக் கூத்தனைத் தரிசிக்கச் செல்லும்போது எழுநிலைக் கோபுரத்தின் முன்னர் நிலத்திறைஞ்சி, மலருங் கண்ணீர்த்துளி ததும்பப் புகுந்து, வலம் வந்து, பேரம்பலத்தை வணங்கி, பெருமான் திரு நடம்புரியும் சிற்றம்பலத்துட் சென்றார் உள்ளும் புறமும் ஒன்றி உருக பெருமானைத் துதித்தார். ஆரா ஆசையாகிய ஆனந்தக் கடலுள் திளைத்து 'பொன் வண்ணத்தந்தாதி' யைப் பாடியருளினார்.

தன்னை வந்தடைந்தவர்களுக்குப் பெருமானுக்குரிய திருப்பணிகளில், அவர் விரும்பியவற்றைப் பயில்விக்கும் தொண்டுசெய்து வாழ்ந்து வந்தவர் **கணநாதர்.**

பகைவர்களைத் தன்னுடைய தோள்வலியால் வென்று, பருமானுடைய திருநாமத்தை நாள் தோறும் நவிலும் நலம் மிக்கவர் **கூற்றுவா.** இவருக்கு மகுடம் புனைய தில்லை வாழ் அந்தணர்கள் மறுக்கவே, மிகுந்த வருத்தமுடன் பெருமானைப் பணிந்தார். அன்றிரவு கனவில், 'தனக்கு முடியாகப் பெருமானுடைய மலர்ப்பாதம் வேண்டும்' என வேண்ட, பெருமானும் அளித்தருளினார். பெருமானுடைய கோயில்களிலெல்லாம் உலகோர் மகிழும் வகையில் தனித்தனியே பெரும் பூசனைகளை இயற்றியவர்.

அருமறைச் சைவம் தழைக்க அரசாண்டவர் **புகழ்ச் சோழர்.** எல்லாச் சிவாலயங்களிலும் நிரை பெரும் பூசனைகள் விளங்கவும், அடியார்கள் குறையிரந்து வேண்டுவனவற்றைக் குறிப்பறிந்து கொடுத்துதவியும் வாழ்ந்துவந்தவர்.

பெருமானுடைய திரு நீற்றையே, செல்வமாகக் கொண்டவர். **நரசிங்கமுனையரையர்.** பெருமானுடைய திருவடிகளை அடைவதையே பெரும்பேறாகக் கொண்டவர்.

பெருமானுடைய மலரடிகளில் நீங்கா அன்பு கொண்டவர் **கலிக்கம்பர்.** சிவனடியார்களுக்குப் போனகமும், அவர் விரும்பும் கறி, நெய், தயிர், தீம்பால் தேனினும் இனிய கனிகட்டி ஆகியவற்றோடு அமுது செய்வித்தவர்.

சிவனடியார்களை யாராவது இகழ்ந்துரைத்தால் உரைத்த அவரது நாவைக் கத்தியால் வலித்து அரிகிற சத்தியால் **சத்தியார்.** என்று பெயர் பெற்றவர். இப்பணியைப் பல காலம் அடியார் மீது கொண்ட இரக்கத்தினால் செய்துவந்தவர்.

ஐய மின்றி அரிய திருப்பணி
மெய்யி னாற்செய்த **வீரத் திருத்தொண்டா**[1]

என்று சேக்கிழார் சத்தியாரைப் புகழ்கின்றார்.

பெருமானுக்கு மனத்திலே கோயில்கட்டி, உறவு ஆதி ஆகியவற்றை உணரும் ஒளி விளக்குச் சுடரேற்றி, இறவாத ஆனந்தம் எனும் திரு மஞ்சனம் ஆட்டி, அன்பு எனும் அமுது அமைத்து அர்ச்சனை செய்தவர் **வாயிலார்.** பெருமானுடைய திருவடிகளையே புகலிடமாகக் கொண்டவர்.

திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுளாகிய பெருமானுக்கு ஆலயம் எடுக்க எண்ணி, மிக்க பொருள் தேடியும் கிடைக்கப்பெறாது வருந்தி மனத்தினாலேயே சிவாலயம் கட்டியவர் **பூசலார்.** காடவர்கோன் காஞ்சியில் கற்றளி எடுத்துச் சிவலிங்கம் தாபிக்கும் நாளிற்கு முதல் நாள் மன்னனது கனவில் தோன்றி, பூசலாரின் ஆலயத்திற்குள் நாளை தான்புகப் போவதாகவும், சிவலிங்கம் தாபிப்பதை வேறொரு நாளில் வைத்துக் கொள்ளுமாறும் கூறியருளி

1. பெரியபுராணம் சத்தி நாயனார் புராணம், 6

னார். பூசலார் பொருளின்றி வருத்தமடைவது உல கோருக்குத் தென்படாவண்ணம் தன் மனத்திற்குள் கட்டிய கோயிலுக்குள் பெருமான் விரும்பி புகுந்தார்.

நாடாண்ட மன்னனாகிய தனதுகணவன் நின்ற சீர் நெடுமாறனும் நாட்டு மக்களும் சமண சமயத்தைப் பின் பற்றிய போதும் தான் அச்சமய நெறியை மேற்கொள் ளாது, சைவ நெறியைத் தனது கணவனுக்குத் தெரியாமலே போற்றி வளர்த்த பெருந்தகை **மங்கையர்க்கரசியார்**. தக்க சமயத்தில் திறம்படச் செயலாற்றி, பாண்டி மண்டலத்தி லிருந்து சமண சமயத்தை வெளியேற்றி விட்டுச் சைவம் தழைக்கக் காரணமாயிருந்தவர். அதனால் தான் சேக்கிழார் இவரை,

மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம் வளவர்
திருக்குலக் கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னிநாடாள் தென்னர்
குலப் பழிதீர்ந்ததெய்வப்பாவை[1]

என்று போற்றிப் பரவுகின்றார்.



1. பெரியபுராணம் மங்கையர்க்கரசியார் புராணம், 1

# 5. பண்பாடு — சொற் பொருள் விளக்கம்

பண்பாடு—செற்பொருள் விளக்கம் எனும் இவ் இயல் 'பண்பாடு' என்ற சொல்லின் தோற்றம். வளர்ச்சி, ஆகிய நிலைகளை நன்றாக விளக்கும் வகையில்

அ. பண்பாடு—மசால்லாய்வு

ஆ. பண்பாடு—பொருள் ஆய்வு

இ. பண்பாடு—செல்லாட்சி

ஈ. பண்பாடு—சொற்பொருள் வளர்ந்தமைந்த நிலை.

என்னும் தலைப்புக்களில் செய்திகளை விரித்துரைக்கின்றது.

## அ. பண்பாடு—சொல்லாய்வு

'பண்பாடு' என்னும் சொல் இன்று பல்வேறு இலக்கியங்களில் மிகுதியும் ஆளப்படுகிறது. கற்றறிவாளர்களும் அரசியல் வாதிகளும் இச் சொல்லை மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். 'பண்பாடு'என்னும் சொல் பழைய தமிழ் இலக்கியங்களில் பயன்படுத்தப் படவில்லை. பண்பு என்ற சொல்தான் ஆளப்பட்டு வந்துள்ளது.

'பண்பாடு' என்னும் சொல் 1930 வரை வந்துள்ள தமிழிலக்கியங்களில் கையாளப்படவில்லை. 'பண்பாடு' என்பதைக் குறிப்பிட 'பண்பு' என்ற சொல்தான் ஆளப் பட்டது. வள்ளுவர் 'பண்புடைமை' என்னும் அதிகாரம் படைத்து அதில் 'பண்புடையார்',[1] 'மக்கட்பண்பு'[2] என்று தான் குறிப்பிடுகின்றார். பண்பாடு என்று கூறவில்லை.

---

1. திருக்குறள், 996
2. திருக்குறள், 997

'பண்பு' என்ற சொல்லும் 'பாடு' என்ற சொல்லும் இணைந்துதான் 'பண்பாடு' என்று சொல்லாக்கம் பெற்றிருக்க வேண்டும்.பண்பு+பாடு→பண்பாடு. இதனைப் பண்பும், பாடும் என்று உம்மைத் தொகையாகவும் கொள்ளலாம். 'பண்பு' என்ற சொல்லுக்கும், 'பாடு'என்ற சொல்லுக்கும் தமிழிலக்கியங்கள் தரும் விளக்கங்களும், பண்பாடு' என்பதற்குத் தரும் விளக்கங்களும் ஒத்தமைந்துள்ளமை நோக்கத்தக்கது.

"பண்புள்ள பாடறிவார் மாட்டு" என்றும்,[1]

"பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்"[2]

என்றும் கூறியிருப்பது சிந்தனைக்குரியது.

## ஆ. பண்பாடு—பொருளாய்வு

சென்னைப் பல்கலைக் கழகத்தமிழகராதி 'பண்பாடு' என்பதற்கு நேரடியான பொருள் தரவில்லை.

பண்படுத்தல்— to refine;to temper season;சீர்திருத்துதல்; to prepare or make suitablte for நிலம் முதலியவற்றைச் செம்மைப் படுத்துதல்.

பண்பாளன்— குணவாளன் 'பாயும் பனிமறைந்தப் பண்பாளர்'[3]

என்று பொருள் தருகிறது.

ஆங்கிலத்தில், 'CULTURE' என்ற சொல்லிற்கு நிகராக பண்பாடு என்ற சொல் ஆளப்படுகிறது.

---

1. திருக்குறள், 995
2. கலித்தொகை, (நெய்தற்கலி), 133.
3. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதி, ப. 2454.

Culture— (N) பயிர்செய்தல், பண்படுத்துதல், பண்படுநிலை, பண்பட்டநிலை, உடற்பயிற்சியால் ஏற்படும் பண்பு வளம், மனப்பயிற்சியால் விளையும் திருத்த வளம், அறிவு வளர்ச்சி, நாகரிகமானத் தன்மை, நாகரிகத்தின் பயனாக நலம், மேன்மை, நாகரிக வகை, நாகரிகப்படிவம், செய்முறை சார்ந்து வளர்க்கப்பட்நுண்மத் தொகுதி "V" - பயிர்செய் பண்படுத்து, சீர்திருத்து.

Cultured— பண்பட்ட, கல்வியால் மேம்பட்ட, நாகரிக நயமுள்ள, மேன்மையாக்கப்பட்ட என்று பொருள்காணப்படுகிறது.[1]

கதிரைவேற்பிள்ளையவர்கள்,

பண்பு—குணம், தகுதி, விதம்

பாடு—அனுபவிக்கை, இடம், உண்டாகுகை என்றும் பொருள் தருகிறார்,[2]

கோனார் அகராதி,

பண்பு—குணம், அழகு, முறை, செய்கை

பாடு—உழைப்பு, துன்பம், உண்டாகுதல்[3]

என்றும் பொருள் தருகிறது.

"**Encyclopaedia Brittanica**" Culture என்பதற்கு The history of the ideas, if n0t of the term reaches back in to antiquity and typically involves three Components:

---

1. *English Tamil Dictionary, Madras University,* p. 364.
2. தமிழ் அகராதி, பக் 982.
3. கோனார் தமிழ்க்கையரகராதி, ப. 157.

1) a socially or culturally identifiable population 2) a natural environment, and 3) some postualated, implied, or identified interaction between the two which of the three components is given the greatest emphasis and the actual constitution of each has varied. Areas and regions there are intellectual construal constructs and net real entities.[1]

என்று தரும் விளக்கம் தமிழிலக்கியங்கள் கூறும் பண்பாடு என்ற பொருளோடு ஒத்து வருவது குறிப்பிடத்தக்கது.

'பண்பு' என்பதற்குக் குணம், அழகு, தகுதி, செய்கை என்பது பொருள். 'பாடு' என்பது உண்டாகுகை, உண்டாகுதல் என்னும் பொருள் தரும் சொல். பண்பாடு எனும் சொல் உலக ஒழுக்கம்,[2] கடமை, குணநலம், பயன், இனிமை[3], நடுநிலை[4], நற்குண நற்செய்கைகளை உடைமை என்னும் பொருளில் ஆளப்படுகின்றது.

**இ. பண்பாடு சொல்லாட்சி**

பண்பு, பண்புடைமை என்னும் சொற்கள்தான் தமிழிலக்கியங்களில் காணப்படுகின்றன. 'பண்பாடு' என்ற சொல்லை முதன்முதலில் 1937ல் டி.கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் பயன்படுத்தியதாக க. அப்பாத்துரை அவர்கள் குறிப்பிடுகின்றார்[5]. பண்பாடு என்ற கருத்தமைப் பிற்கு அச்சொல்லை முதன் முதலில் வழங்கியது யார்

1. *The Encyclopaedia Brittanica, in* 30 Volumes, p. 664.
2. கலித்தொகை, 133
3. புறநானூறு, 120
4. புறநானூறு, 197
5. கா. அப்பாதுரை, 'தமிழர் பண்பாடு'. ப.1.

என்பது அறுதியிட்டுக் கூற இயலவில்லை. மறுமலர்ச்சியே அப்பணியைச் சாதித்திருக்கும்[1] என்று கருதலாம். பண்பாடு என்ற சொல் இன்று பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் மிகுதியாக ஆளப்படுகின்றது.

**பண்புடைமை:** என்பதற்குப் பரிமேலழகர் 'பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லார் இயல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல்[2] என்றும், பரிப்பெருமாள் 'யாவர் மாட்டும் ஒத்த அன்பினராய்க் கலந்து ஒழுகுதலும் அவரவர் வருத்தத்திற்கும் பரிதலும், பழுத்துண்டலும், பழி நாணலும் முதலான நற்குணங்கள் பலவும் உடைமை'[3] என்றும் கூறுகின்றனர். மனவளர்ச்சி மேல் மேலும் தொடர்ந்து திருந்திக்கொண்டே வரும் திருத்த நிலையைப் பண்பாடு[4] என்று கருதலாம்.

முற்காலத்தில் பண்பாட்டை நாகரிகத்தினுள் அடக்கியே கூறி வந்தனர். ஆனால் இக்காலத்தில் நாகரிகத்தையும் பண்பாட்டில் அடக்கியே கூறுகின்றனர். உடை, அணிகலன்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய ஒப்பனையை நாகரிகமும்; அவர்களது சமூக ஒழுகலாறுகளையும் பழக்க வழக்கங்களையும் பண்பாடு என்ற சொல் உணர்த்துகின்றது என்று கொள்ளலாம்.

**ஈ. பண்பாடு-எனும் சொற்பொருள் வளர்ந்தமைந்த நிலை**

ஒருவன் தன் குணநலன்களை நிரப்புவதிலும், தன்னைச் சூழ்ந்த சமுதாயத்தின் நலன்களைப் பேணுவதிலும்

---

1. கா. அப்பாதுரை, 'தென்னகப் பண்பு', 146
2. 'திருக்குறள்' ,பண்புடைமை' அதிகாரத்திற்கு விளக்கம் தரும்போது பரிமேலழகர் இவ்வாறு உரைக்கின்றார்.
3. 'திருக்குறள் உரைவளம்', ப. 622
4. டாக்டர். ஆறு. இராமநாதன், 'நாட்டு புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்' ப, 134.

பேரவாக் கொண்டிருக்கும் நிலை பண்பாடாகும்.[1] என மேத்யூ ஆர்னால்ட் கூறுகின்றார். இன்றைய நிலையில் பண்பாடும், நாகரிகமும் பிரித்துக் காண முடியாதபடி இரு சொற்களும் உணர்த்தும் பொருள்களும் இணைந்து காணப் படுகின்றன. பண்பாடு என்று இக்காலத்தார் கருதுவதை வள்ளுவர் நாகரிகம் என்றே குறித்தார் என்பது,

பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்[2]

என்ற குறள் வரிகளால் புலனாகின்றது.

மனிதன் தன்னலத்தைப் புறக்கணித்து, பொது நலத்தைப் போற்றுவதற்கு அன்பு, அறிவு, ஈகை, வாய்மை ஒப்புரவு, கண்ணோட்டம், தூய்மை போன்ற பண்புகள் அவன் பிறரோடு கொள்ளும் உறவுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன. இப் பண்புகள் மனித இனத்தோடு மட்டுமின்றி உலக உயிர்கள் அனைத்தோடும் விரிந்து அளாவி நிற்கும். இதுவே மிக உயர்ந்த மனிதப் பண்பு.

பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப்பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்று கருதலாம். அந்த வெளிப்பாடு சுவை உணர்வாகவும், நடை, உடை, பாவனைகளாகவும் தோன்றும். அப்பண்பாடில்லாதவனைக் காட்டுமிராண்டி என்கின்றோம். வாழ்வின் பற்பல போக்குகள் அமைந்த பல்வேறு நிலைகளையும் பண்பாடென்பது குறிக்கும். உடலைப் பற்றிய நன்னிலை, மனத்தைப் பற்றிய தூய்மை நிலை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும்! என்கின்றார் தெ. பொ. மீனாட்சிசுந்தரம்.

---

1. அ. தட்சிணாமூர்த்தி, 'தமிழர் நாகரிகமும் பண்பாடும்', ப. 4. (மேற்கோள் - மேத்யூ ஆர்னால்ட்)
2. 'திருக்குறள்', 580

பயிரிடுவதற்கேற்றவாறு நன்கு செய்யப்பட்ட நிலம் நன்செய்; நன்கு பண்படுத்தப்பட்ட நிலம்; பொருட்கள் விளையும் சிறப்பினைக் கொண்டது. பக்குவப்பட்ட மனிதனைப் 'பண்பட்ட மனிதன்' என்பர். பண்பட்ட உள்ளம் உடையவர்களே பண்பாடு கொண்டவர்கள்.

'பண்பு' என்பதற்கு இவ்வியல் தருகின்ற விளக்கங் களைக் கொண்டு, உலகத்தவர்களது இயல்புகளை அறிந்து அவர்கள் விரும்புமாறு ஒழுகுவது என்பது தான் பண்பாடு என்னும் சொல் இன்று உணர்த்துகின்ற பொருளாகக் கொள்ளலாம்.

> வாழ்க்கையில் மனிதன் முழு நிறைவை அடைவதற்கு முயலும் முயற்சியின் பயனாக அமைவது பண்பாடு. முழு நிறைவான வாழ்க்கை இனிமையும் ஒளியும் உடையதாக அமையும். முழு நிறைவான வாழ்க்கை யைப்பெற மனிதர்கள் ஒன்றாகக் கூடி வாழ்வதால் உருவாகும் சமூக அமைப்புக்களின் இயல்புகளாக அமைவது பண்பாடு. சமூகங்கள் பல சேர்ந்து ஒரு சமுதாயமாகப் பின்னிப்பிணைந்து இயங்கும் பொழுது உருவாகும் வாழ்க்கை நெறி, பழக்க வழக்கங்கள் கலை உணர்வு, ஆட்சியமைப்புகள், சிந்தனை முதிர்ச்சி ஆகிய அனைத்தும் இணைந்து ஒருவகைச் சமுதாயச் சிந்தனையாக வெளிப்படுவதே பண்பாடு.[1]

என்று டாக்டர். க.த. திருநாவுக்கரசு கூறுவது அறியத் தக்கது.



1. டாக்டர். க.த. திருநாவுக்கரசு, 'சமஸ்கிருத ஆதிக்கம்,' 'பண்பாடு சமஸ்கிருதமயமாக்கப்படல்' ப. 6.

# 6. பெரியபுராணத்தில் ஆடவர் பண்பாடு

பெரிய புராணத்தில் காணப்படும் வாழ்வாங்கு வாழ்ந்த சீரடியார்களது வாழ்க்கையை—வாழ்வியல் நெறிகளை அவர்கள் போற்றிக்காத்த பண்பாட்டை ஆடவர் பண்பாடு என்னும் தலைப்பில் ஆராய்கின்றது இக்கட்டுரை.

பெரிய புராணத்தில் கூறப்படும் ஆண் அடியார் களது வாழ்வியல் நெறிகளை ஆழ்ந்து நோக்கும்போது கீழ்க்காணும் பண்பாட்டுக் கூறுகள்—பக்தியின் அடிப் படையில் எழுந்த பண்பாட்டுப் பெருமிதங்கள் அவர்தம் வாழ்வியலில் மிளிர்கின்றன.

அ) தாம் மேற்கொண்ட—போற்றி ஒழுகுகின்ற கொள்கையில் எத்தகைய இடர்பாடுகள் நேரிட்டபோதும் மனம் தளராமல், மேற்கொண்ட கொள்கையைக் கைவிடாமல் உறுதியாயிருந்த தன்மை.

ஆ) தம்மால் இயன்ற அளவுக்குப் பிறருக்கு வழங்கி உதவி செய்து வாழ்ந்த தன்மை.

இ) தம்மிடம் அடைக்கலப் படுத்தப்பட்ட பொருட் களைக் காப்பாற்றிட வேண்டும் என்பதிலுள்ள பேரார்வம்.

ஈ) வறுமையிலும் தளர்வுறாது கொள்கையைத் தொடர்ந்து கடைப்பிடித்தமை.

உ) கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுவதில் உள்ள முனைப்பு—ஆகியவை முறையே ஈண்டு விளக்கி ஆராயப் பெறுகின்றன.

**அ. மேற்கொண்ட கொள்கையில் உறுதியாயிருந்த தன்மை**

பெரியபுராணத்தில் இடம்பெறும் அடியார்கள் அனைவருமே தங்கள் வாழ்க்கையில் ஏதேனும் ஒரு தலையாய குறிக்கோளை—கொள்கையை உறுதியாக மேற்கொண்டு, எந்தவிதமான இக்கட்டானச் சூழல்களிலிருந்தும் இடையூறுகளிலிருந்தும் கொள்கையிலிருந்தும் பின்வாங்காது அதனைத் தொடர்ந்து கடைபிடித்து வாழ்ந்து வந்தனர். அவர்கள் மேற்கொண்ட கொள்கைகளுக்கு ஏதேனும் இடையூறுகள்/இடர்ப்பாடுகள் நேரிட்டால் அதற்காகத் தங்களுடைய இன்னுயிரையும் கொடுப்பதற்குத் தயங்காத மனநிலையை உடையவர்கள். "ஒவ்வொருவரும் ஒரு சிறந்த குறிக்கோளோடு வாழ்ந்தார்கள். அக்குறிக்கோளுக்கு ஆபத்து வந்த காலத்தில் உயிரை விட்டேனும் குறிக்கோளைக் காப்பாற்றினார்கள்"[1] என்று அ.ச ஞான சம்பந்தம் கூறுவது இங்குக் குறிக்கத்தக்கது.

**சிறுத்தொண்டர்** என்னும் சிவனடியார் 'நாள்தோறும் சிவனடியார்களை உணவு உண்ணச் செய்து, உபசரித்து, பிறகு தான் உண்பதை' வழக்கமாகக் கொண்டவர்.

> "நறை இதழித் திருமுடியார் அடியாரை நாடோறும்
> முறைமையினில் திருவமுது முன்னூட்டிப்
> பின்னுண்ணும்"[2]

என்ற சேக்கிழார் வாக்காலும், காபாலிக வேடத்தோடு வந்த சிவபெருமான் "தொண்டனார்க் கெந்நாளுஞ் சோறளிக்குந் திருத்தொண்டர்" என்று குறிப்பிடுவதாலும் சிறுத்தொண்டரது கொள்கையை அறியலாம்.

---

1. அ.ச. ஞானசம்பந்தன், 'தேசிய இலக்கியம்' ப. 59
2. 'பெரியபுராணம்' சிறுத்தொண்டர் புராணம் பாடல் எண் 13.

சிறுத்தொண்டருடைய உண்மைத் தன்மையையும், அன்பையும் நுகர்ந்து அருளுவதற்காக காபாலிகராய் (வயிரவராய்) வேடந்தாங்கி வந்த சிவபெருமான் தன்னை உணவு உண்பதற்காக அழைக்க வந்த சிறுத்தொண்டரிடம், தான்'பசு'வைத்தான் உண்பேன் என்றும், அதிலும் 'நரப்பசு'வாக இருக்கவேண்டும் என்றும்; அதுவும் ஒரு குடிக்கு ஒரே ஒரு மகனாகவும், இருக்கவேண்டும் என்றும்; அந்நரப்பசுவையும் அவனைப் பாசமுடன் பெற்றெடுத்த தாய் பிடித்துக்கொள்ள, அவனது தந்தை மிகுந்த மனமகிழ்ச்சியோடு அரிய, அந்த இறைச்சியைக் கொண்டு சமைக்கப்பட்ட உணவையே தான் உண்பேன்'' என்றும் பலவிதமான செய்வதற்கரிய நிபந்தனைகளை விதிக்க 'எம்பெருமான் அமுது செய்யப் பெறுவாரேயானால் இது கூட அடியேனுக்கு அரிதன்று' என்று கூறித் தனது ஒரே மகனை அறுத்துக் கறி சமைத்து காபாலிகரை அமுது செய்வித்தார் சிறித்தொண்டர்.

சிறுத் தொண்டருக்குத் தன்னுடைய கொள்கையை மேற்கொண்டிட, பெருமானால் மிகக் கொடிய இடையூறுகள் நிபந்தனைகளாகக் கூறப்பட்டபோதும், அவற்றையெல்லாம் வென்று, தன் கொள்கையில் சிறந்து உயர்ந்து மிளிர்கின்றார் சிறுத்தொண்டர்.

அதுமட்டுமின்றி, தன்னுடன் உணவு உண்ண சிறுத்தொண்டரையும் அழைத்தபோது, அவரும் பெருமானுடன் அமர்ந்து எவ்விதமான மனவருத்தமுமின்றி அக்கறியமுதைப் பெருமானுக்கு முன்பே தான் உண்ணத் தொடங்கிய நிகழ்ச்சியின் மூலம் கொள்கைக் குன்றமாக உயர்ந்து நிற்கின்றார் சிறுத்தொண்டர்.

''வாளால் மகவறிந்து ஊட்ட வல்லேன் அல்லேன்''

என்று பட்டினத்தடிகளால் வியந்து பாராட்டப் பெற்றார்.

தாம் விரும்புகின்ற ஒரு தலைவனுக்காகத் தம்முடைய உடல், பொருள், ஆவி ஆகிய அனைத்தையும் அர்ப்பணிப் போர் இக்காலத்தில் இருப்பதைப் போன்று, தன்னுடைய ஆன்ம நாயகனுக்காக—பிறவிப் பெருங்கடலைப் போக்குப வனுக்காக—எல்லையிலாப் பேரின்பத்தை அளிப்பவனுக் காகத் தனது மகனைக் கறிசமைத்து அமுது செய்வித்தவர் கள் அக்காலத்தில் வாழ்ந்திருந்தார்கள்/வாழ்ந்திருப்பார்கள் என்று கருதலாம்/நம்பலாம். சிறுத்தொண்டரின் வாழ்க்கை நிகழ்ச்களின் மூலம்இறைவனையே வென்றமானுடனைச் சேக்கிழார் சித்திரித்துக் காட்டுகிறன்ார் எனலாம்.

கருணாமூர்த்தியான-பரமதயாளனான பெருமான் தன்னுடைய பக்தனிடம்-அடியவனிடம் அவனுடைய பக்தனுடைய மகனையே 'கறி சமைத்துப் போடு என்று கேட்கலாமா? என்று சிலர் இறைவனின் செய்கையில் குறைகாண்கின்றனர். இறைவனின் நோக்கம், 'தனது பக்த னின் மகன் கறியை உண்ணவேண்டும்' என்பதல்ல. தன்னு டைய பக்தனின் அன்பைத் தாம் நுகரவும், அவனுக்கு அருள் பாலிக்கவும் (பெருமானின் திருவடிக்கீழ் என்றும் பிரியாது இறைஞ்சியிருத்தல்), அவனை - அவனுடைய பண்பட்ட வாழ்க்கையை உலகோருக்கு ஒளியூட்டிக்காட்ட —வுமேயாகும். தனது பக்தனை அவனது ஒப்பற்ற பண்பை உலகோருக்குக் காட்ட வேண்டி, பெருமான் தன்னைக் கொடுமைக்காரனாக—கருணையில்லாதவனாக உலகோ ருக்குத் தெரியும்படி ஆக்கிக்கொள்கின்றான்.

**கலியர்** என்னும் அடியவர், திருவொற்றியூரிலுள்ள பெருமான் கோயிலுக்கு அல்லும்பகலும், திருக்கோயிலின் உள்ளும் புறமும் திருவிளக்குப் போடுவதைத் தனது

கயாகக் கொண்டவர். மிக்க செல்வம் பெற்றி
ாலத்துச்செய்தார். இறைவனின் திருவருளால் அச்
மெல்லாம் அழிந்து மிகுந்த வறுமையை எய்திய
கூலி வேலை செய்து அதன் மூலம் கிடைக்கும்
ளைக் கொண்டு தன் கொள்கையை நிறைவேற்றி
. கூலி வேலையும் கிடைக்காமற் போகவே தனது
ய விற்று அதன்மூலம் கிடைத்த பொருளைக்
டு திருவிளக்கெரிக்கும் பணியைத் தொடர்ந்தார்.
ருளும் தீர்ந்து விடவே, தனது மனைவியை விற்று
மூலம் கிடைக்கும் பொருளைக் கொண்டு திரு
கரிக்க முற்பட, அவர்தம் மனைவியாரை வாங்கிக்
டு பொருள் அளிக்க எவரும் முன் வாராமை
மிகுந்த வருத்தம் அடைந்தார்.

ந்க்கோயிலுக்குச் சென்று, "மணி விளக்கு மாளில்
ாள்வன்" என்று கூறித் தன்னுடைய மிடறினை
ால் அரிந்து அதனால் உண்டாகும் குருதியினால்
கரிக்க முற்பட, பெருமான் அவருடைய கைகளைப்
கொண்டு அருளுகின்றார்.

வ்வாறு, கலியர் பெருமான் கோயிலுக்குத் திரு
ப் போடும் குறிக்கோளுக்குப் பல விதமான இடர்ப்
ர் நேரிட்டபோதும், அதைப் புறங்கண்டு இறுதியில்
டைய உயிரைக் கொடுத்தும் கொள்கையைக்
பிடிக்க முயல்கின்றார்.

னடியயர்களுக்கு நாள்தோறும் உணவளிப்பதையே
கையாகக் கொண்ட அடியார் ஒருவருக்கு, வறுமை
ாரணத்தால் தேவையான பொருட்கள் கிட்டாமல்
வே, அவர் சிறிது கூடக் கவலைப்படாது, இடங்கழி
ன்ற மன்னனுடைய பண்டாரத்திலுள்ள நெற்கூட்டில்
அடியார்களுக்கு உணவளித்தலாகிய தன்னுடைய

கொள்கையைத் தொய்வு ஏற்படாமல் மேற்கொண்டமை யிலிருந்து அவ் அடியாரது பண்பை அறிய முடிகின்றது.

பெரியபுராணத்தில் இடம் பெறும் அடியார்கள் உணவளித்ததும்-உதவியதும் தன்னையொத்த சிவனடியார் களுக்கே. நாட்டிலுள்ள ஒவ்வொரு சமயத்தாரும் மற்ற சமயத்தாருக்கில்லா விட்டாலும் தங்களுடைய சமயத்தைப் பின்பற்றுகின்ற ஏழைகளுக்கு-எளியவர்களுக்கும் உணவளிப் பார்களேயானால், உதவி செய்வார்களேயானால் நாட் டில் பசியும், வறுமையும் நீங்கி, வசியும்—வளனும் தழைத் தோங்கும். இதனைக் கருதியே சேக்கிழார், 'மண்ணில் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும் அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல் என்று குறிப்பிட்டுள்ளதாகக் கருதலாம். அறங்களிலெல்லாம் தலையாய அறம் பசித் தோருக்குஉணவளிப்பதே. "மண்திணிஞாலத்து வாழ் வோர்க் கெல்லாம் உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத் தோரே[1] என்றும் "பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுக என ஆதிரை இட்டனள் **ஆருயிர்மருந்தென**"[2] என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**ஆ. பிறருக்கு உதவி/ வழங்கி வாழ்ந்த தன்மை :**

பெரியபுராணம் அடியார்களுள் பெரும்பாலானோர் மற்றவர்களுக்குத் (சிவனடியார்களுக்கு) தம்மால் இயன்ற அளவுக்கு உதவிகள் செய்து வாழ்வதையே குறிக்கோளா கக் கொண்டு வாழ்ந்திருக்கின்றனர். ஒல்லும் வகையான். அறவினைகளை இடைவிடாது செய்து வாழ்ந்து வந்தவர் கள். தான் மேற்கொண்டிருக்கின்ற சமயத்தைப் பின்பற்று கின்றமற்றவர்களுக்கு, தான் வழிபடுகின்றக் கடவுளை

1. 'மணிமேகலை', பாத்திரம் பெற்றகாதை, 95-96
2. 'மணிமேகலை', ஆதிரைபிச்சையிட்ட காதை,134-135.

வழிபடுகின்ற மற்றவர்களுக்கு உதவிகள் பல செய்தும், உண வளித்தும் போற்றிக்காத்த அடியார்களது வாழ்வே பெரிய புராணத்தின் சாரமாகத் திகழ்கின்றது. அதாவது, சமயத் தின் அடிப்படையில் உதவிகள் பல செய்து உபசரித்து வாழ்ந்திருக்கின்றார்கள். 'ஒரு குறிப்பிட்ட சமயத்தைச் சார்ந்திருப்போர்களை, அவர்களுக்குள் காணப்படும் சாதி வேறுபாடு— போன்றவைகளைத் தகர்த்தெறிந்துவிட்டு, அவர்களை ஒருங்கிணைக்கும் சக்தியாகச் சமயமும் கடவு ளும் அக்காலத்தில் திகழந்திருக்கின்றன/ திகழ்ந்திருக் கின்றனர்.

குயவரான **திருநீலகண்டர்** மட்பாண்டம் செய்து விற்று அதன்மூலம் கிடைக்கும் பொருளைக்கொண்டு தன் னுடைய வாழ்க்கையை நிகழ்த்தியவர் இவர் தன்னிடம் வரும் சிவனடியார்களுக்கு மிகுந்த மகிழ்வோடு நாள் தோறும் இலவசமாகத் திருவோடு ஒன்று செய்து கொடுத்துக் கொண்டு வாழ்ந்து வந்தவர்.

"வளரிளம் திங்கட்கண்ணி மன்றுளார் அடியார்க்கென் றும்
உளமகிழ் சிறப்பின் மல்க ஓடளித் தொழுகும்"[1]

—என்று சேக்கிழார், இவர் சிவனடியார்களுக்குச் செய்த தொண்டைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

நெசவாளர் சமூகத்தைச் சேர்ந்தவர் **நேசர்** என்பவர் தன்னுடைய மனத்தை இறைவனுடைய திருவடித்தாமரை களுக்கும், வாயினைத் திருவைந்தெழுத்து ஓதுவதற்கும். கைகளைச் சிவனடியார்களுக்காகவும் உரித்தாக்கியவர்,

உடையும், கீளும், கோவணமும் செய்து நாள்தோறும் இடையறாது சிவனடியார்களுக்கு வழங்கி அவர்களது திரு வடிகளைப் போற்றித் துதித்து வாழ்ந்து வந்தவர்.

வணிகத் குலத்தைச் சேர்ந்தவர் **அமர்நீதியார்** என்ப

---

1. 'பெரியபுராணம்', திருநீலகண்ட நாயனார் புராணம்,3

வர். இவர், தன்னை நாடி வந்த அடியவர்களுக்கு அமுது செய்வித்ததோடமையால் கந்தை, கீள், உடை, கோவணம் ஆகியவற்றை வழங்கி வாழ்ந்து வந்தவர், இவரைச் சேக்கிழார்

"..........................................................................................

அந்தி வண்ணர்தம் அடியவர்க் கமுதுசெய் வித்துக்
கந்தை கீளுடை கோவணம் கருத்தறிந் துதவி
வந்த செல்வத்தின் வளத்தினால் வரும் பயன்
கொள்வார்"[1]

என்று குறிப்பிடுகின்றார். பெற்ற பெருஞ்செல்வத்தின், பயனே அச்செல்வம் பெறார்க்கு / இல்லாதார்க்கு உதவி வாழ்வதேயாகும் என்னும் கருத்தை "வந்த செல்வத்தின் வளத்தினால் வரும் பயன்கொள்வார்" எனும் வரிகளால் சேக்கிழார் உணர்த்துகின்றார் எனக் கருதலாம். "அற்றார் அழிபசிதீர்த்தல் அஃது/பெற்றான் பொருள் வைப்புழி" என்ற குறட் கருத்தோடு சேக்கிழாரின்மேற் குறிப்பிட்ட பாடல் வரி ஒப்பு நோக்கத்தக்கதாக உள்ளது.

**மானக்கஞ்சாரர்**, சிவனடியார்கள் தங்களது தேவையை வாய்விட்டுக் கூறும் முன்பே, அவர்தம் குறிப்பறிந்து கொடுக்கும் உயர்பண்பு வாய்க்கப் பெற்றவர் என்பதை

"ஆறுலவுஞ் சடைக்கற்றை அந்தணர்தம் அடியாராம்
..........................................................................நேர்
கூறுவதன்முன் அவர்தங் குறிப்பறிந்து கொடுத்துள்
ளார்"[2]

என்ற சேக்கிழார் திருவாக்கால் அறியலாம்.

**பெருமிழலைக் குறும்பர்** சிவனடியார்கள் வாய்திறந்து கூறாமுன்பே, எதிர்சென்று, அவர்தம் குறிப்பறிந்து

1. 'பெரியபுராணம்', அமர்நீதி நாயனார் புராணம் 3
2. 'பெரியபுராணம்'மாணிக்கஞ்சாறநாயனார் புராணம்,9

செயலாற்றும் பெற்றிமைவுடையவர் அடியார்களுக்கு உண்ண உணவும், கொண்டு செல்ல நிதியமும் கொடுத்த பண்பாளர்.

**மூர்க்கர்** என்னும் அடியார் நாள் தோறும் நல்ல சுவை யோடு கூடிய உணவை மிகுந்தவிருப்போடு அடியார்களுக்கு அமுது செய்வித்து, அவர்கள் வேண்டும் பொருட்களையும் வழங்கி மகிழ்வடைந்தவர். வறுமை வந்தடையவே அடியார்களுக்கு உணவும், பொருளும் அளிக்க இயலாமற் போகவே தான் முன்னம் கற்று வைத்திருந்த சூதினால் சூதாட்டமாடி அதன்மூலம் கிடைத்திட்ட வருவாயைக் கொண்டு அடியவர் பணியைச் செய்த பண்பாளர்.

மேற் கூறப்பட்ட அடியார்களின் வாழ்க்கை நிகழ்ச்சி களிலிருந்து தம்மால் இயன்ற அளவுக்குப் பிறருக்கு உதவி / வழங்கி வாழ்ந்தவர்கள் பெரியபுராணச் சீரடியார் கள் என்பது தெரிய வருகின்றது.

**இ. அடைக்கலப் பொருட்களைக் காக்க வேண்டுமென்பதி லுள்ள தன்னார்வம்**

அடைக்கலப் பொருட்களைக் காப்பது சிறந்த தர்மம். அடைக்கலமாக வந்தவர்களை / அடைக்கலப்படுத்தப் பட்டப் பொருட்களைக் காக்கவேண்டியதன் இன்றியமை யாமையை-உயர்வை-சிறப்பை வீடணின் அடைக்கலப் படலத்தில் இராமன் கூறுவது போல கம்பர் கூறுவது இங்கு குறிப்பிடத்தக்கது.[1] தங்களிடம் அடைக்கலப் படுத்தப் பட்டப் பொருட்களைப் பாதுகாத்து அவற்றை மீண்டும் உரியவர்களிடம் ஒப்படைத்தல் வேண்டும் என்ற கடமை யுணர்வில் மேலோங்கியிருந்தவர்கள் சிவனடியார்கள் என்பதற்குச் சில அடியார்களது வரலாறுகள் சான்று பகர்கின்றன.

---

1. 'கம்பராமாயணம்', வீடணன் அடைக்கலப்படலம், 195-117.

திருநீலகண்டரிடம், சிவயோகியர் வடிவில் வந்த சிவ பெருமானால் அடைக்கலமாகக் கொடுக்கப்பட்ட 'ஓடு' எல்லாம் வைத்துத் தான் வாங்க வல்லான்' ஆகிய பெரு மானால் மறைக்கப்பட்ட நிலையில், சில நாட்கள் கழித்து சிவயோகியார் திரும்ப வந்து தனது திருவோட்டைக் கேட்க, ஓடு காணாமற் போனதற்காகவும், அதனைப் பாதுகாத்துத் தர இயலாமைக்காகவும்,

"வளத்தினால் மிக்க ஓடு வெளவினேன் அல்லேன்
ஒல்லை, உளத்தினும் களவிலாமைக் கென்செய்கேன்?
உறையும்"[1]

என்று திருநீலகண்டர் ஓடு காணாமற் போனதற்காகவும் திருப்பித்தர இயலாததற்காகவும் மனவேதனைப் படுகின்றார்.

"பழைய மற்றிதனில் நல்ல பாத்திரந்தருவன் கொண்டிப்
பிழையினைப் பொறுக்கவேண்டும் பெரும"[2]

என்று சிவயோகியாரிடம் இறைஞ்சுகின்றார்.

பிரமசாரிவடி வந்தாங்கி வந்த பெருமான், "யான் பொன்னியில் நீராடி வரச் செல்கிறேன். அதற்குள் மழை வந்தாலும் வரலாம். எனவே, இந்த உலர்ந்த கோவணத்தைப் பாதுகாத்துக் கொடு" என்று **அமர்நீதியாரிடம்** கொடுக்க, இறையருளால் அக்கோவணம் காணாமற் போகவே, திரும்ப வந்து கேட்கும் அடியார்க்குத் தர இயலாமற் போனதற்காக அமர்நீதியார் மனம் வருந்துவதிலிருந்தும், வேதனைப்படுவதிலிருந்தும் இறுதியாக அக் கோவணத்திற்கு ஈடாகத் தானும், தன்மனைவியும் தன்

---

1. 'பெரியபுராணம்', திருநீலகண்ட நாயனார் புராணம், 27
2. 'பெரியபுராணம்', திருநீலகண்ட நாயனார் புராணம், 23

குழந்தைகளும் வீட்டிலுள்ள அனைத்துச் செல்வங்களோ டும் துலையில் (தராசு) ஏறி நிற்பதிலிருந்து, அமர்நீதியா ரின் அடைக்கலப் பொருள்களைப் பாதுகாக்கவேண்டும். இல்லாவிடில் அதனை உயிரைக் கொடுத்தேனும் ஈடுகட்ட வேண்டும் என்ற உயரியபண்பு வெளிப்படுகின்றது. மேற் கூறிய திருநீலகண்டர், அமர்நீதியார் வாழ்க்கை நிகழ்ச்சி களிலிருந்து 'தம்மிடம் அடைக்கலப்படுத்தப்பட்ட பொருட் களைக் காப்பாற்றிட வேண்டும்' என்பதில் அடியார்களுக் கிருந்த பேரார்வம் வெளிப்பட்டுத் தோன்றுகிறது.

**ஈ. வறுமையிலும் கொள்கை மாறாத்தன்மை**

வறுமைதான் ஒருமனிதனை/நண்பனை அவன் எப்படிப் பட்டவன் என்பதைத் தெளிவாகப்படம் பிடித்துக் காட்டு கின்றது. எப்படிப் பட்டவனாக இருந்தாலும் தன்னுடைய வாழ்வில் வறுமை வந்து அடையுமே எனில் அவன் நிலை மாறிப் போவது உலக இயற்கை.

குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையு மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி[1] .... ... ... .... .... ...

என்ற 'மணிமேகலை' வரிகள் வறுமையினால் மனிதர் கள் எய்தும் நிலையைக் குறுப்பிடுகின்றன.

பெரியபுராணத்தில் இடம்பெறும் அடியவர்கள் தாங்கள் வளமாக வாழ்த்திருந்தபோது எப்படி வாழ்ந் தார்களோ அப்படியே மிகுந்த வறுமையை அடைந்த போதும் வாழ்ந்திருக்கின்றார்கள்.

---

1. 'மணிமேகலை', பாத்திரம் பெற்ற காதை, 76-80.

**இளையாகுன்டி மாறர்:** சிவனடியார்களுக்கு நாலு விதத்தினில் ஆறுவகையினில் தினமும் அமுதூட்டி உபசரிப் பதையே தன்னுடைய கொள்கையாகக் கொண்டவர். இவ்வாறு, வளமான நாட்களில் மட்டுமின்றி, மிகுந்த வறுமையான நாட்களிலும் செய்ய வல்லவர் இளையான் குடிமாறர் என்பதை வெளிப்படுத்திட எண்ணினார் பெருமான். வறுமை வந்துற்றது. கடன்கள் பெற்றுத் தன்னுடைய கொள்கையாகிய அடியார்களுக்கு உணவிடு தலைச் செய்து வந்தார். அவரது செல்வமெலாம் தொலைந்து அவர்களுக்கே உணவு இல்லாதபோது, அவர் களை நாடித் தபோதனர் வடிவில்வந்த பெருமானை விருந்தூட்டி உபசரிக்க முற்படுகின்றனர்.

நமக்கு முன்பிங் குணவில்லை யாயினும்
இமக்கு லக்கொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாம்இன் அடிசில் தகவுற
அமைக்கு மாறெங்ஙனே? அணங்கே?[1]—

எனத் தன் மனைவியிடம்கேட்க,

"அவரோ, மற்றொன்றுங் காண்கிலேன்;/ ஏதிலா ரும் இனித் தருவாரில்லை;/போதும் வைகிற்றுப் போம் இடம் வேறிலை;/தீதுசெய் வினையேற்குகென் செயல்?"[2] என இரவில் வந்த சிவனடியாருக்கு உணவளித்து உபசரிக்க இயலாமையை எண்ணி மனம் மிக வருந்துகின்றனர்.

வயலில் விதைத்த நெல்முளைகளை வாரிக்கொண்டு வந்து அமுதாக்கி, கொல்லையில் உள்ள கீரைகளைப்

---

1. 'பெரியபுராணம்', இளையான் குடிமாற நாயனார் புராணம், 11
2. 'பெரியபுராணம்', இளையான் குடிமாற நாயனார் புராணம், 12

பறித்துப் பலவித கறிகளைச் சமைத்து 'தபோதனர்' வடிவில் வந்த பெருமானை அமுதூட்டி உபசரிக்க முற்பட்டனர். இவ்வாறு, வளம் சுருங்கிய காலத்தும் மனம் சுருங்குதலின்றி, வறுமையை வென்று தன் கொள்கையை விடாது கடைப்பிடித்த இளையான்குடி மாறரின் பண்பு விளக்கம் பெறுகின்றது.

> இம் மாகேசுவர பூசையை இவர் செல்வம் உள்ளபோது செய்தமையினும் மிக்க வறுமை வந்தபோதும் மனம் சிறிதும் சுருங்குதலின்றி முன்போலவே சிறிதும் தவறாது செய்தமை இவ்வளவு என்று சொல்லக் கூடாத பெரும் வியப்பைத் தருகிறது. இவருக்கு வந்த வறுமையே மிக்க பெரியது[1]

என்று ஆறுமுக நாவலர் கூறுவது இங்கு குறிப்பிடத்தக்கது.

**அதிபத்தர்** என்னும் நாயனார் மீனவர். வலையில் அகப்படும் முதல் மீனைச் சிவ பெருமானுக்கென்று மீண்டும் கடலிலேயே விட்டு விடும் வழக்கத்தை உடையவர். சில நாட்களாக ஒரு மீன் மட்டுமே வலையில் கிடைக்க, அம்மீனையும் கடலிலே விட்டுவிட்டு, தன் கொள்கையிலிருந்து பிறழாது வெறுமனே வீடு திரும்பினார். ஆதலால், அவரது உடல் தளர்வுற்றது. சுற்றத்தினர்கள் உண்பதற்கு உணவின்றி வாடினர். இந்நிலையில், ஒரு நாள் வலையில் பொன்மீன் ஒன்று கிடைக்கவே அதைக்கண்டு தான் வறுமையுற்ற நிலையிலும் சலனத்திற்காளாகாமல், தன் கொள்கையிலிருந்து பின்வாங்காமல் அப் பொன்மீனை "மற்றிது என்னை ஆளுடையவர்க்காகும்! சென்று பொற்கழல் சேர்"[2] என்று கூறி மீண்டும் கடலிலேயே விட்டு

1. ஆறுமுகநாவலர், 'பெரியபுராணம் சூசனம்'ப. 65
2. 'பெரியபுராணம்', 'அதிபத்த நாயனார் புராணம், 17

விடுகின்றார். இத்தகைய, வறுமையிலும் மனம் சலனப் படா சீரிய பண்பாளர்—அதிபக்தியையுடைய அதிபத்தர்.

இறைவனுக்குத் திருவிளக்கு இடுவதையே தன்னுடைய கொள்கையாகக் கொண்டு அதனை இடைவிடாது தொடர்ந்து நிகழ்த்தியவர் **கணம்புல்லர்.** "இல்லிடை உள்ளன எல்லாம் மாறி விளக்கெரித்தவர்"[1] என்று சேக்கிழார் கூறுவதன் மூலம் வீட்டிலுள்ள பொருட்களை எல்லாம் விற்றும் தான் மேற்கொண்டிருந்த பணியை/ செயலை இடைவிடாது நிகழ்தித்தியவர் கணம்புல்லர் என்பதை அறியமுடிகின்றது.வீட்டிலுள்ள பொருட்களெல்லாம் தீர்ந்து போகவே, கணம்புற்களை அறுத்து விற்று அதன் மூலம் கிடைக்கும் பொருளைக் கொண்டு திருவிளக்கெரித்தவர். அப்புற்களையும் வாங்குவோரில்லாது போகவே தன்னுடைய தலை முடியையே திருவிளக்காகக் கொண்டு எரித்தவர். இச்செயலின் மூலம் கணம்புல்லருடைய கொள்கை உறுதியை—பக்தியின் பெருமிதத்தை உணர முடிகின்றது.

**உ. கொடுத்த வாக்கை காப்பாற்றுவதில் உள்ள முனைப்பு**

சொன்ன சொல் தவறாமையும், கொடுத்த வாக்கை மீறாமையும் சிறந்த மானுடப் பண்புகளாகக் குறிக்கத் தக்கன.

பெரிய புராணத்தில் இடம் பெறும் அடியவர்கள்—சிவநேயச் செல்வர்கள் தாங்கள் கொடுத்த வாக்கை எத்தகையச் சூழலிலும் காப்பாற்றியே தீரவேண்டும் என்பதில், மிகுந்த ஆர்வம் கொண்டவர்களாகத் திகழ்ந்திருக்கின்றார்கள்'

---

1. 'பெரியபுராணம்','கணம்புல்ல நாயனார் புராணம்', 4

திருநீலகண்டர் பரத்தையிடம் சென்று மீண்டபோது "தீண்டுவீராயின் எம்மைத் திருநீலகண்டம்"[1] என்று, திருநீலகண்டத்தின் மீது ஆணையிட்டுத் தன்னைத் தீண்டக் கூடாது என்ற தன் மனைவிக்கு, "எம்மை என்றதனால் மற்றை மாதரார் தமையும் என்றன் மனத்தினிம் தீண்டேன்"[2] என்று வாக்குறுதி கொடுத்து விட்டு, வளமலி இளமைநீங்கி வடிவுறு மூப்பு வருமளவும் தன் மனைவியோடு அற்புறு புணர்ச்சியில்லாமல் வாழ்ந்து வந்தார் என்பதிலிருந்தும்,

தான், முன்னர்க் கொடுத்த திருவோடு காணப்படாத சூழ்நிலையில் சிவவேதியராய் வந்த பெருமான் திருநீலகண்டரிடம், "மையறு சிறப்பின் மிக்க மனையவள் தன்னைப் பற்றி மொய்யலர் வாவிபுக்கு மூழ்கு"[3] என்று கூறியபோது திருநீல கண்டர் தன்னை நிரபராதி என்று நிரூபித்திடத் தனது மனைவியைத் தன்உடால் தொடாது குச்சி கொண்டு தானும் பிடித்து அவரையும் பிடிக்கச் செய்து குளத்தில் மூழ்கியச் செயலிலிருந்தும் திருநீலகண்டருடைய கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதில் உள்ள ஆர்வம் வெளிப்படுகின்றது.

**திருக்குறிப்புத்தொண்டர்** சலவைத் தொழிலாளர் சமூகத்தைச் சேர்ந்தவர். சிவனடியார்களின் திருக்குறப்பினை அறிந்து போற்றியதால் திருக்குறிப்புத் தொண்டர் என்னும்பெயர்பெற்றதாகச்சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

இவருக்கு அருளுவதற்காக அழுக்கடைந்தக் கந்தையுடன் மாதவ வேடந்தாங்கி வந்த பெருமானிடம்,

---

1. 'பெரியபுராணம்', 'திருநீலகண்ட நாயனார் புராணம்'6
2. 'பெரியபுராணம்', 'திருநீலகண்ட நாயனார் புராணம்'7
3. 'பெரியபுராணம்', 'திருநீலகண்ட நாயனார் புராணம்', 28

பொழுது போவதற்குள் தங்களது ஆடையைத்தூய்மை செய்து கொடுத்து விடுகிறேன்'' என்று வாக்குச்கொடுத்து விட்டு, பெருமழை பெய்தக்காரணத்தால் சொன்னபடி கொடுக்க இயலாமற் போகவே தன்னுடைய தலையைத் துணி துவைக்கும் கல்லிலேயே மோதி மண்டையை உடைத்துக்கொள்ள முற்பட்டார் என்பதிலிருந்து, மற்றவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டுமென் பதில் அடியவர்கள் கொண்டிருந்த ஆர்வம் முனைப்பு/ வைராக்கியம் வெளிப்படுகின்றது.

**பக்தித்திறம்**

**கண்ணப்பர்** தன்மீது கொண்டிருக்கின்ற பக்தித் திறத்தை—அன்பினை வேதநெறிப்படி தனக்குப் பூசனை செய்கின்ற சிவகோசரியாருக்குக் காட்டிடவிரும்பிய பெருமான் தனது வலக்கண்ணிலிருந்து குருதி வழியும்படி. இருந்தார். இதைத் தூரத்திலிருந்து கண்ட கண்ணப்பர் மனம் பதைத்து ஓடிவந்து செய்வதறியாது திகைத்து அழுது அரற்றினார். பச்சிலைகளைப்பறித்து வந்து பிழிந்து வார்த்தார், அப்போதும் வழிகின்ற குருதி நிற்கவில்லை.

'உற்றநோய் தீர்ப்பது ஊனுக்கு ஊன்' என்று கருதிக் கண்ணப்பர் தனது கண்ணைப் பெயர்த்தெடுத்து பெருமானுடைய கண்களில் அப்பினார். அப்போது வழிந்த ருதி நின்றது. மிக மகிழ்ந்து ஆடிப்பாடினார்,

கண்ணப்பரது அன்பினைச் சிவகோசரியாருக்கு மேலும் காட்டிட விரும்பிய பெருமான், தனது இடக்கண்ணிலும் குருதி வழியும் படிச்செய்தார். அப்போது கண்ணப்பர் அஞ்சி வருந்தாது, தன்னுடைய மற்றொரு கண்ணையும் பெயர்த்து பெருமானுடையஇடக்கண்ணில் அப்புவதற்காகத் தன்னுடைய கண்ணைப் பெயர்த்தெடுக்க புறப்பட்டார் அப்போது பெருமான், கண்ணப்பரது கையைப் பிடித்துக்

கொண்டு 'கண்ணப்ப நிற்க என்று கூறியருளி "மாறிலாய் என்வலத்தில் நிற்க" என்று அருள்பாளித்தார்.

மேற் கூறப்பட்ட நிகழ்ச்சியிலிருந்து, தன்னுடைய கண்களைப் பொருட்படுத்தாதுப் பெயர்த்தெடுத்து, பெருமானுக்கு அப்பி உற்ற துயர் போக்க முற்பட்ட கண்ணப்பருடைய பக்தித்திறம் வெளிப்பட்டுத் தோன்று கின்றது. கண்ணப்பரின் செயல்கள் மூலம் உள்ளத்தில் அன்பில்லாது, வேதநெறியை மட்டுமே அடிப்படையாக கொண்டு இயற்றப்படும் பூசனைகளை விட உள்ளத்தில் அன்போடு இயற்றப்படும் பூசனைகளையே பெருமான் அதிகம் விரும்புகின்றார் என்பதும்; பெருமானுக்குத் தேவை யானது 'உண்மையான அன்பே' என்பதும் தெரிய வருகின்றன.

பெருமானுக்குக் குங்குலியத்தூபம் போடுவதையே பணியாகக் கொண்டவர் **கலயநாயனார்**

அவர், மிக்க வறுமையடையவே, இரண்டு நாட்களுக்கு ஒருமுறை உணவு சமைத்து உண்டு வந்தனர் அவரது இல்லத்தினர். குடும்ப வறுமையைப் போக்கிட வேண்டி, தன்னுடைய திருமங்கல நாணை (தாலி) க் கொடுத்து நெல் வாங்கிக் கொண்டு வருமாறு கூறினார் அவரது மனைவியார். அவர் நெல்வாங்கு வதற்காகச் சென்ற போது, குங்குலியப் பொதியைச் சுமந்து கொண்டு ஒருவன் எதிர்வர, அவனிடம் தாலியைக் கொடுத்துவிட்டு அந்த குங்கிலியப் பொதியை வாங்கிக் கொண்டு நேரே பெரு மானுடைய திருக்கோயிலுக்குச் சென்று விட்டார் கலயர்.

கலயநாயனாரின் மேற்கூறப்பட்டச் செயலிலிருந்து, இல்லத்தினருக்கு உணவு இல்லாமல் போனாலும் போகலாம் ஆனால் பெருமானுக்குத் தான் போடும் குங்கிலியத்

தூபம் மட்டும் தடை படக்கூடாது என்று கருதிய அவரது பக்தித்திறம் வெளிப்படுகின்றது.

மன்னனுக்காகப் போரிட்டு, அதற்காக அவன் தரும் பெருஞ்செல்வத்தைக் கொண்டு, பெருமானுடைய கோயில்கள் தோறும், நாள் தோறும் திரு அமுதுக்காக நெல் கொடுக்கவேண்டி, நெல்லை மலைபோலச் சேமித்து வரும் பணியைச் செய்து வந்தவர் **கோட்புலியார்.**

மன்னனுக்காகப் போரிட கோட்புலியார் சென்றிருந்த போது, மிகுந்த வறுமையை அடைந்த அவரது இல்லத்தினர் 'அந்த நெற்குவட்டைப் பிரித்து, தேவையான நெல்லை எடுத்துக் கொண்டு பிறகு கொடுத்து விடுவோம்' என்று கருதி குவட்டைப்பிரித்து நெல்லை எடுத்துக் கொண்டனர்.

பணிமுடித்துத் திரும்பிய கோட்புலியார், தனது உறவினர்கள் நெற்குவட்டை அழித்த செய்தியை அறிந்து, அறியாதது போலக்காட்டிக் கொண்டு நெற்குவட்டை அழித்த தனது சுற்றத்தார் அனைவரையும் கொல்ல வேண்டும் என்ற நோக்கோடு, "நிறைய செல்வமும், உடையும் கொடுக்கிறேன் வாருங்கள்" என்று அவர்கள் அனைவரையும் அழைத்து, இருநிதியம் தருவார்போல, "பெருமானுடைய அமுது படிக்காக உள்ள நெற்குவட்டை அழித்த உங்களைக் கொல்லாமல் விடுவேனோ" என்று மிகுந்த கோபங்கொண்டு அவர்கள் அனைவரையும் வெட்டிக் கொன்றார்.

ஒரு குழந்தையையும் அவர் வெட்டமுற்பட்டபோது, அக்குழந்தைக்குரியவன் அதைத்தடுத்து, "இவன் ஒரே ஒருவன் தான் இருக்கிறான். குடிக்கொரு புதல்வன். மேலும், இக்குழந்தை அந்நெலரிசியைச் சாப்பிட வில்லை" என்று கூற, கோட்புலியார், "இந்நெல்லை உண்டவளது முலைப்பாலை இக்குழந்தை குடித்திருக்கிறது.

அதனால் இக்குழந்தையும் கொல்லப் படவேண்டியதே'' என்று கூறி அக்குழந்தையையும் வெட்டி வீழ்த்தினார்.

மேற்கூறப்பட்ட, கோட்புலியாரின் செய்கைகளி லிருந்து, 'பெருமானுக்குரியதான பொருளைப் பெருமானுக் காக அல்லாமல், அதைப் பயன்படுத்தியவர்கள் எவ்வளவு தான் நெருங்கிய உறவினார்களாக இருந்தாலும் அவர்கள் தண்டிக்கப்படவேண்டியவர்களே' என்று அவர்கருதியதும், அவரது பக்திப் பெருமிதமும் தெரியவருகின்றன.

> ''எந்நிலையில் நின்றாலும் எக்கோலங் கொண்டாலும்
> மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்''[1]

என்று வாழ்ந்து வந்தவர் **சாக்கியநாயனார்.**

நாள் தோறும் சிவலிங்கத்தின் மீது மிகுந்த அன்போடு ஒரு கல்லை எடுத்தெறிந்து (சமணர்களுக்காக அஞ்சி மலரால் அர்ச்சனை செய்யாது) வழிபட்டு வந்தார். அதன் பிறகே உண்ணுகிற வழக்கத்தையும் மேற்கொண்டிருந்தார்·

ஒரு நாள் பெருமான் அருளால் மேற்கூறியவாறு. செய்யாமல் உணவு, உண்ண முற்பட்டார்.

''எங்கள் பிரான்தனை எறியா தயர்ந்தேன்யான்''[2] என எழுந்து மிகுந்த அன்போடு சிவலிங்கத்தின் மீது கல்லெறிந்து வழிபாடியற்றச் சென்றார்.

சாக்கிய நாயனாரின் மேற்கூறப்பட்டச் செய்கையி லிருந்து, சமண சமயத்தவர்களுக்கு மத்தியில் வாழ்ந்து கொண்டு, பெருமானிடம் பக்தி கொண்டு மிகுந்த அன்போடு சிவலிங்கத்தின் மீது கல் எறிந்து வழிபாடாற்றிய அவரது பக்தித்திறம் வெளிப்படுகின்றது.



---

1. 'பெரியபுராணம்' 'சாக்கிய நாயனார் புராணம்', 6
2. 'பெரியபுராணம்' 'சாக்கிய நாயனார் புராணம்', 15

# 7. பெரியபுராணத்தில் மகளிர் பண்பாடு

இறைவனையே உமையொரு பாகனாகக் கண்டவர்கள் தமிழர்கள். "பெண்ணினல்லா ளொடும் பெருந்தகை யிருந்ததே" என்றார் ஞானசம்பந்த பெமான். பெருமான் உமையம்மையோடு சேர்ந்து திருக்காட்சியளிக்கும்போது அனுக்ரகமும், அவன் மட்டும் தனியே காட்சியளிக்கும்போது நிக்ரகமும் ஏற்படுவதை சைவ இலக்கியங்களின் வழி அறியலாம். இந்திய மண்ணில் தோன்றிய சைவ,வைணவச் சமயங்கள் பெண்மைக்கு முதலிடமும்—முக்கியத்துவமும் தந்து விளங்குவதை அவ்வச்சமய இலக்கியங்களும், புராணங்களும் உணர்த்துகின்றன. மனைவியோடு இணைந்து நின்று இல்லறக் கடமைகளை ஆற்றும்போதே இல்லறமும் சிறக்கின்றது. ஆடவனும் சிறப்படைகின்றான்.

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனை மாட்சித் தாயினும் இல்"[1]

—என்றார் வள்ளுவரும்.

மிக உன்னதமான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கின்ற—மிகுந்தசிறப்பும் புகழும் அடைந்திருக்கின்ற ஒவ்வோர் ஆடவனுக்கும் பின்னால் ஒரு பெண் மறைந்து நிற்கின்றாள். ஆடவர்களின் உயர்வுக்கும், சிறப்பிற்கும்; சமுதாயப் பெருமிதத்திற்கும் காரணமாகத் திகழ்பவர்களே பெண்கள்தான்.

பெரிய புராணத்தில் இடம் பெறும் பெண் அடியார்கள் 'மனையறத்தின் வேரா'கத் திகழ்ந்தவர்கள். பாரத

1. திருக்குறள், 52

நாட்டின் பண்பட்ட இல்வாழ்க்கை நெறிகளைத் தமது வாழ்க்கையில் போற்றிக்காத்தவர்கள். இக்காலப் பெண்களுக்கு மாத்திரமன்றி எதிர்வரும் பெண்சமுதாயத்திற்கும் முன்மாதிரியாகத் திகழ்பவர்கள். அவர்களது செயல்களையும் வாழ்வியல் நெறிகளையும் ஆழ்ந்து நோக்கினால் அவர்கள் போற்றிக்காத்த பண்புகளாக

அ. மறை பிறர் அறியாமல் வாழ்ந்த தன்மை

ஆ. விருந்தோம்பல்

இ. கணவன் சொல்லை மதித்து அதன்படி நடந்த பண்பு

ஈ. கணவனது இறப்புக்குப்பின் தான் மட்டும் வாழ விரும்பாமை

உ. கணவனது கொள்கைக்கு உறுதுணையாக இருந்தமை

ஊ. திருமணத்துக்கு முன் உடலுறவை அனுமதிக்காதப் பண்பு

எ. பெற்றோர்களால் தேர்வு செய்யப் பெற்றவர்களையே கனவனாகக் கொண்டமை.

ஆகியவை தெரிய வருகின்றன.

**அ. மறை பிறர் அறியாமல் வாழ்ந்தமை**

கணவன், மனைவி ஆகிய இருவருக்கிடையே நிகழும் அக வாழ்வின் நிகழ்ச்சிகள் அவர்கள் இருவரைத் தவிர மற்றவர் யாவருக்கும் தெரியக் கூடாது. இதுவே 'மறை' எனப்படும். இதை 'நிறை' என சங்கச் சான்றோர் குறிப்பிடுவர். ''நிறைவெனப்படுவது மறை பிறர் அறியாமை''[1]

1. 'கலித்தொகை', நெய்தற்கலி, 16.

என கலித் தொகையும், "மகளிர் நிறை காக்கும் காப்பே தலை"[1] என திருக்குறளும் குறிப்பிடுகின்றன. இத்தகைய இல்வாழ்க்கை நெறியைப் பழந்தமிழர் உள்ளிட்ட பாரத நாட்டிலுள்ளோர் தமது வாழ்வில் போற்றிக் காத்துள்ளனர். இந்நெறி திருநீல கண்டநாயனார் வரலாற்றில் அமைந்து விளங்குகின்றது.

தனது கணவரான திருநீலகண்டர். 'தன்னையும் தன்னைப் போன்ற பெண்களையும் மனத்தால்கூட இனித்தீண்டவே மாட்டேன்' என்று தனக்குச் சூளுறவு (சத்தியம்)செய்து கொடுத்தபிறகு, திருநீலகண்டரது மனைவியார் அவரது கணவருக்குத் தேவையான அனைத்துப் பணிவிடைகளையும் - தேவைகளையும் (அவரது உடலைக் கூடத் தொடாமல்) மிகுந்த அன்புடன் செய்து கொடுத்து வெளி உலகத்தாருக்குக் கணவன் மனைவிபோல் வாழ்ந்து வந்தார்கள். உள்ளப் புணர்ச்சியும் மெய்யுறு புணர்ச்சியும் அவர்களிடத்தே நிகழவில்லை. இவ்வாறு. பல ஆண்டுக் காலம் இன்பத்தைத்துய்த்திட வேண்டிய இளமைப் பருவம் தொடங்கி முதுமைப் பருவம் வந்தடைந்த பிறகும் கூட வாழ்ந்து வந்தனர். ஒரே வீட்டில் கணவனும் மனைவியும் ஒருவர் மற்றவரது உடலைக் கூடத் தொட்டுக் கொள்ளாமல் பல ஆண்டுக்காலமாக வாழ்ந்து வருகின்றனர். இதனை சேக்கிழார்.

கற்புறு மனைவியாரும் கணவனார்க் கான எல்லாம்
பொற்புறமெய்யுறாமல் பொருந்துவபோற்றிச் செய்தே
இற்புறம் பொழியா தங்கண் இருவரும் வேறுவைகி
அற்புறு புணர்ச்சி இன்மை அயலறியாமை வாழ்ந்தார்[2]

1. திருக்குறள். 57
2. பெரியபுராணம், 'திருநீலகண்டநாயனார் புராணம்'; 8

என்று, திருநீலகண்டரது மனைவியார், தன் கணவருடன் பல ஆண்டுக்காலம் உடலுறவு கொள்ளாமல் வாழ்ந்ததை அண்டை அயலார் யாரும் அறிந்து கொள்ளாத வண்ணம் வாழ்ந்தார். எனக் கூறுவதன்மூலம் திரு நீலகண்டரது மனைவியார் போற்றிக்காத்த பண்பை நாம் அறிய முடிகின்றது.

**விருந்தோம்பல்**

தமிழர்கள் விருந்தோம்பும் பண்பிலே சிறந்து விளங்கியவர்கள். விருந்தோம்பும் முறையைப் பற்றியும் விருந்தோம்பிய திறத்தைப்பற்றியும் கூறும் பாடல்கள் தமிழில் மிகுதியாக உள்ளன. வள்ளுவர் விருந்தோம்பலுக் கெனத் தனி அதிகாரமே அமைத்திருக்கின்றார்.

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு[1]

என வள்ளுவர் விருந்தோம்புவதன் முக்கியத்துவத்தைக் குறிப்பிடுகின்றார்.

கணவனும் மனைவியும் இணைந்தே விருந்தினர்களை வரவேற்று உபசரித்தல் வேண்டும். மனைவி மட்டும் விருந்தினர்களை உபசரித்தல் கூடாது.

கண்ணகி, தன் கணவன் தன்னை விட்டுப் பிரிந்து வாழ்ந்ததற்காகக் கூட வருந்தாது விருந்தினர்களை ஓம்பிட முடியாதநிலைக்கே வருந்தியதாக

"அறவோர்க் களித்தலும் அந்தணரோம்பலும்
**தொல்லோர் சிறப்பின்**
**விருந்தெதிர் கோடலும்** இழந்த என்னை"[2] என்று

---

1. திருக்குறள், 81
2. சிலப்பதிகாரம் கொலை களக் காதை, 71—73

வறியவர்களுக்குப் பொருள் ஈயாது, இருந்ததற்கும் அந்தணர்களை உபசரிக்க இயலாமற் போனதற்கும் விருந்தினர்களை எதிரேற்று உபசரிக்க முடியாமல் போனதற்கும் வருந்துகின்றவளாக இளங்கோவடிகள் படைத்திருக்கின்றார்.

சீதை அசோக வனத்தில் சிறையிருந்தபோது, விருந்தினர்கள் வந்தால் அவர்களை இராமன் எப்படி உபசரிப்பானோ? 'விருந்து கண்டபோது என் உறுமோ? என்று விம்மும்' என்று வருத்தப்பட்டதாகக் கம்பர் குறிப்பிடுகின்றார்[1].

பெரியபுராணத்தில் இடம் பெறும் அடியவர்களது மனைவியர்கள் விருந்தோம்பும் பண்பில் தங்களது கணவர்களின் குறிப்பறிந்து விருந்தினர்களை நன்றாக உபசரித்திருக்கின்றனர்.

இளையான் குடிமாறரும் அவர் மனைவியாரும் நாள் தோறும் அடியார்களுக்கு அமுதூட்டி உபசரித்துவந்தனர். இறைவன் திருவருளால் வறுமையுற்றபோது, இரவு நேரத்தில் தங்களது இல்லத்திற்கு வந்த சிவனடியாரை அன்புடன் வரவேற்று, உபசரித்தனர். அவர்களிருவருக்குமே உண்ண உணவின்றி பட்டினிகிடந்த போது, இளையான் குடிமாறர் வந்த சிவனடியாரை எப்படி அமுது செய்விப்பது? என்று செய்வதறியாது தன் மனைவியிடம் வினவ, 'பகலில் வயலில் விதைத்த நெல்லை வாரிக்கொண்டு வந்தால் உணவு சமைக்கலாம்' என்று அவர் கூற, அவ்வாறே இளையான் குடிமாறர் வயலிலிருந்து கொண்டு வந்த நெல்லைக் கொண்டு சோறு சமைத்தும், கொல்லையில் உள்ள கீரைகளைக் கொண்டு பலவிதமான கறிகளைச் சமைத்தும்

1. கம்பராமாயணம், காட்சிப்படலம், 15

வந்திருந்த சிவனடியாரை அன்புடன் உபசரித்தனர் என்பதிலிருந்து இளையான்குடி மாறரின் மனைவியுடைய விருந்தோம்பும் திறத்தினை அறியமுடிகின்றது.

சிறுத்தொண்டரின் மனைவியரான திருவெண்காட்டு நங்கை, தங்களின் இல்லத்திற்குக் காபாலிக வேடத்தோடு வந்த பெருமானுக்கு அவரது விருப்பத்தின்படியே தங்களின் ஒரே புதல்வனான சீராளனை அரிந்து, கறி சமைத்து, அமுதூட்டி உபசரித்தச் செயலிலிருந்து திருவெண்காட்டு நங்கையின் விருந்தோம்பும் பண்பை அறிய முடிகின்றது.

இவ்வாறு, இளையான்குடி மாற நாயனாரும் சிறுத் தொண்டரும் அடியார்களின் வரிசையில் இடம்பெற்றுச் சிறப்புடன் திகழ்வதற்குக் காரணம் அவர்களது மனைவியர் களின் "மனைமாட்சியே" யாகும். இளையான்குடி மாறர் சிறுத்தொண்டர் ஆகியோரின் நிலைத்த புகழுக்குக் காரணமாகத் திகழ்பவர்கள் அவர்களது மனைவியர்களே எனலாம்.

பரவையார் கொண்ட ஊடலைத் தணிப்பதற்காகச் சுந்தரர், பெருமானைப் பரவையாரிடம் தூது அனுப்பி னார். இதை அறிந்த ஏயர்கோன் கலிக்காமர், பெரு மானைத் தூதாக அனுப்பிய செயலுக்காக சுந்தரர் மீது கோபமும் வருத்தமும் கொண்டார். ஏயர்கோனுக்கும் சுந்தரருக்கும் மீண்டும் நல்லுறவை உண்டாக்க வேண்டி பெருமான் கலிக்காமருக்குச் சூலை நோயைக் கொடுத் தருளி, "உனை வருத்தும் சூலை வன்தொண்டன் (சுந்தரர்) தீர்க்கில் அன்றி முந்துற ஒழியாது"[1] என்று கூறி விட்டு, சுந்தரரிடம் சென்று, "ஏயர் கோன் உற்ற சூலை,

1. **பெரியபுராணம்**, ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், 391

சென்று நீ தீர்ப்பாயாக"[1] என்று திருவாய் மலர்ந்தருளி னார்.

சுந்தரர் தனது சூலை நோயைத் தீர்க்க வந்து கொண் டிருப்பதைக் கேள்வியுற்ற ஏயர்கோன்,

மற்றவன் இங்குவந்து தீர்ப்பதன் முன் நான் மாயப்,
பற்றிநின் றென்னை நீங்காப் பாதகச்சூலை தன்னை,
உற்ற இவ்வயிற்றி னோடுங் கிழிப்பன் ....................'[2]

என்று கூறித் தன்னுடைய உடைவாளால் தன்னுடைய வயிற்றில் குத்திக்கொள்ள உயிரோடு சூலையும் தீர்ந்தது.

தன் கணவருடன் உயிர்விட முற்பட்ட கலிக்காமர் மனைவியார் 'சுந்தரர் வந்து விட்டார்' என்பதைக் கேள்வி யுற்றவுடன், "ஒருவரும் அழுதல் செய்யா தொழிக" என்று கூறிவிட்டு, கணவர் இறந்து போனதைச் சுந்தரர் அறிந்து கொள்ளா வண்ணம் மறைத்து விட்டு, அரண் மனையை அலங்கரித்து வாயிலில் தூபதீப ஆராதனை களுடன், பூரன கும்ப மரியாதையோடு சுந்தரரை வர வேற்றுஉபசரித்தார்.

கணவன் இறந்து போன சிறிது நேரத்திற்குள்ளாகவே, தன்னுடைய எல்லையிலாத்துயரத்தையும் - சோகத்தையும் மறைத்துக்கொண்டு, கணவன் இறந்துபோன சம்பவத்தை யும் மறைத்து விட்டு, தன் இருப்பிடத்திற்கு வந்த சுந்தரரை—யார்மீது கொண்ட கோபத்தினால் தன் கணவன் இறந்துபட்டானோ அந்த சிவனடியாரை, தன் கணவனை நாடித் தன் இல்லத்திற்கு வந்தவுடன் அன்

1. 'பெரியபுராணம்' ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணம், 394
2. 'பெரியபுராணம்' ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், 397

போடு வரவேற்று உபசரித்த ஏயர்கோன் கலிக்காமருடைய மனைவியின் பண்பு வியப்பிற்குரியதாகவே அமைந்துள்ளது.

தங்கள் இல்லத்திற்கு எழுந்தருளியிருந்த திருநாவுக் கரசரை அமுது செய்விப்பதற்கான பணிகளில் அப்பூதி அடிகளாரும், அவர் மனைவியாரும் முனைந்து ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது, வாழைக்குருத்து அறுக்கச்சென்ற அவர்களது மூத்த திருநாவுக்கரசு விஷத்தினால் தீண்டப் பட்டு வாழைக்குருத்தை தன் தாயின் மடி மீது வைத்து விட்டு, கீழே விழுந்து இறந்துவிட, இச்செய்தி அறிந்தால் நாவுக்கரசர் அமுதுண்ணமாட்டார் என்று, இறந்து போன தங்கள் புதல்வனைப் பாயில் வைத்து மூடி, வீட்டின் ஓர் ஓரத்தில் வைத்து விட்டு, ''அற இது தெரியா வண்ணம் அமுது செய்விப்போம்''[1] என்று, துளங்குதல் இன்றித் தொண்டரைஅமுது செய்விக்க முற்பட்டனர் என்பதிலிருந்து தன் மகன் விஷம் தீண்டி இறந்து போன நிலையிலும், வந்த விருந்தினரை-நாவுக்கரசப்பெருந்தகையை அன்புடன் விருந்தோம்பிய அப்பூதியடிகளாரின் மனைவியின் திறமும், அப்பூதியடிகளாரின் திறமும் எண்ணி எண்ணியெடுத் தற்குரியதாக உள்ளது.

இவ்வாறு, பெரியபுராணத்தில் காணப்பெறும் அடிய வர்களின் விருந்தோம்பிய திறத்திற்கு அடித்தளமாக-ஆதார சுருதியாக அவர்களது மனைவியர்கள் தான் திகழ்ந்திருக்கின்றார்கள் எனில் அது மிகையாகாது.

**இ. கணவன் சொல்லை மதித்து அதன்படி நடந்த பண்பு**

கணவன் சொற்படியே நடப்பதையும், விருப்பப்படியே ஒழுகுவதையும் இந்தியப் பெண்கள் கற்பு நெறியாகக் கொண்டிருக்கின்றனர்.

---

1. பெரியபுராணம், 'அப்பூதிஅடிகள் புராணம்; 29

தன்னிடம் உள்ள செல்வங்கைகளை யெல்லாம் தன்னை நாடி வந்த சிவனடியார்களுக்கே வாரி வழங்கி வாழ்ந்து வந்த **இயற்பகை நாயனார்**, "மிக்க சீரடியார்கள் யாரெனினும் வேண்டும் யாவையும் இல்லையென்னாது" கொடுக்கும் இயல்புடையவர்.[1] பெருமான்தூர்த்த வேடத் தோடு இயற்பகையாரிடம் வந்து, 'சிவனடியார்கள் விரும் பிக் கேட்பனவற்றையெல்லாம் நீ மறுக்காது கொடுக்கும் திறத்தைக்கேட்டு உன்னிடம் ஒன்று பெற விரும்பி இன்று நான் வந்துள்ளேன். அதற்கு நீ உடன் பட்டால் நான் கேட்கிறேன்"[2] என்று கூற, அதற்கு இயல்பகையார்" யாதும் ஒன்றும் என்பக்கல் உண்டாகில்; அன்னது எம்பி ரான் அடியவர் உடைமை"[3] அதனால் நீங்கள் விரும்பிய தைக் கேளுங்கள்" என்று கூற, வந்த அடியவர் உன் மனைவியைக் கொடு" என்று கேட்கிறார். இயற்பகையார் மிக மகிழ்ந்து தன் மனைவியிடம் சென்று, "விதி மணக்குல மடந்தை! இன்று உனை இம் மெய்த்தவர்க்கு நான் கொடுத்தனன்'[4] என்று கூற அவரும் சற்று மனம் கலங்கிப் பின் தெளிந்து,

"இன்று நீர் எனக்கு அருள் செய்தது இதுவேல் என்
உயிர்க்கு ஒரு நாத நீர்உரைத்தது
ஒன்றை நான் செய்யும் அத்தனை அல்லால் உரிமை
வேறு உளதோ எனக்கு"[5]

'நீங்கள் கூறியதைச் செய்வதைத் தவிர வேறொரு பாக்கியம்' எனக்கு உண்டோ?" என்று கூறித் தன்

1. 'பெரியபுராணம்' இயற்பகை நாயனார் புராணம், 2
2. 'பெரியபுராணம்' இயற்பகை நாயனார்புராணம், 6
3. 'பெரியபுராணம்' இயற்பகை நாயனார் புராணம், 7
4. 'பெரியபுராணம்' இயற்பகை நாயனார் புராணம் 8
5. 'பெரியபுராணம்' இயற்பகை நாயனார் புராணம் 9

கணவரை வணங்கிப்பின் தூர்த்த வேடத்தோடு வந்த பெருமானின் திருவடிகளையும் வணங்கி நின்றார். பிறகு தூர்த்த வடிவோடு வந்திருந்த பெருமானுடனேயே புறப் பட்டுச் சென்றார்.

இயற்பகையாரது மனைவியின் வாழ்க்கை நிகழ்ச்சியி லிருந்து, தன் கணவரது வாக்கை வேத வாக்காக கருதிச் செயல்படும் அவரது பண்பு புலப்படுகின்றது. சரியோ தவறோ தன் கணவன் கூறினால் அதைப்பற்றி ஆய்வு செய்யாமல் மனதிற்குள் போராட்டம் நிகழ்த்திக் கொள் ளாமல் அதைக் கடவுள் கூறியதாகவே கொண்டு அதன் படியே ஒழுகுகிற இந்தியப் பெண்மையின் ஒரு குறியீடா கவே இயற்பகை நாயனாரின் மனைவியைக் கருத வேண் டும்.

**ஈ. கணவன் இறந்த பின் தான் மட்டும் வாழ விரும்பாமை**

கணவன் இறந்த பிறகு தான் மட்டும் வாழவிரும்பாது 'உடன் கட்டை' ஏறும் வழக்கத்தை—உயிரைப் போக்கிக் கொள்ளும் வழக்கத்தை தமிழ்ப் பெண்கள் கொண்டிருந் தனர் என்பது பண்டைத் தமிழ் இலக்கியங்களினின்றும் தெரியவருகின்றது. வடவரின் நாகரிகத்தையும், பண் பாட்டையும் வெளிப்படுத்தும் இராமாயண, பாரதங்களில் இக்கொடிய வழக்கம் காணப்படாமையிலிருந்தும், சங்க இலக்கியங்களில் இச்செய்கை காணப்படுவதிலிருந்தும் இவ் வழக்கம், தமிழ்நாட்டில்—தமிழ்ப் பெண்களிடத்தில்தான் தோன்றியிருக்கும் என்று கருத வேண்டியுள்ளது.

தன் கணவனை இழந்த பெண்ணொருத்தி மண் பாண்டம் செய்பவனிடம், தானும் இறப்பதற்கேற்றவாறு பெரிய அகலமான தாழி ஒன்றைக் செய்து தருமாறு வேண்டும்.'

……………………வியன் மலரகன் பொழில் ஈமத்தாழி
அகலிதாக வனைமோ நனந்தலை மூதூர்க் கலஞ்
செய் கோவே''[1]

என்ற புறநானூற்றுப் பாடல் நினைவில் கொள்ளத்தக்க தாக உள்ளது.

ஒல்லையூர் தந்த மூதப்பாண்டியனின் மனைவி பெருங் கோப்பெண்டு தன் கணவன் இறந்தவுடன் தான்மட்டும் வாழவிரும்பாது, தீமூட்டி, சான்றோர் விலக்கவும் விலகாது தீயினுள் புகுந்து உயிரை மாய்த்துக் கொண்டாள்,[2]

பாண்டியன் நெடுஞ்செழியன் இறந்தவுடன், அவன் மனைவி கோப்பெருந்தேவி தானும் உடனே உயிரை விட்டாள்.[3] இவ்வழக்கும் தொடர்ச்சியாக தமிழகத்தில் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டு வந்துள்ளது. பெரிய புராணத்தில் காணப்படும் பெண் அடியார்களிடத்தும் இவ் வழக்கத்தினைக் காண முடிகின்றது.

திருநாவுக்கரசரின் தந்தை இறந்தவுடன், அவரது தாயார் தான் மட்டும் வாழவிரும்பாது உடனே இறந்து விட்டார் என்பதை சேக்கிழார் கற்புநெறி வழுவமால் கணவனாருடன் சென்றாள்'' என்று குறிப்பிடுகின்றார்.

சுந்தரரால் தனது சூலைநோய் தீர்க்கப்படுவதை விரும் பாத ஏயர்கோன் கலிக்காமர், தனது உடைவாளல் தன் உயிரைப் போக்கிக்கொண்டதையறிந்த அவரது மனைவி யார் தன் கணவர் இறந்தபிறகு தானும் உயிர்வாழ விரும்பாது தன் உயிரைப் போக்கிக் கொள்ள முற்பட்டார் என்பதைச் சேக்கிழார்.

---

1. 'புறநானூறு', 256.
2. 'புறநானூறு',246
3. 'சிலப்பதிகாரம்', வழக்குரை காதை, 79—81

"கருதரும் பெருமை நீர்மைக் கலிக்காமர் தேவியாரும்
பொருவருங் கணவரோடு போவது புரியுங்காலை"[1]

என்று கூறுவதன் மூலம் அறியலாம்.

திருமணம் இன்னும் நிகழ்பெறவில்லை, ஆனால், தனக்கென நிச்சயிக்கப் பட்டவன் (கலிப்பகையார்) போர்களத்தில் இறந்துபட்டவுடன், (தனக்கும் அவனுக்கும் இன்னும் திருமணம் நிகழ்பெற வில்லையே என்று கூடக் கருதாமல்) தானும் உயிரைப் போக்கிக் கொள்ள முற்பட்டார். திருநாவுக்கரசரின் தமக்கை திலகவதியார், என்பதைச் சேக்கிழார்,

"எந்தையும் எம் அனையும் அவர்க்கு எனைக்கொடுக்க
இசைந்தார்கள்
அந்தமுறை யால்அவர்க்கே உரியதுநான் ஆதலினால்
இந்தஉயிர் அவர் உயிரோடு இசைவிப்பன்"[2]

என்று கூறுவதால் அறியலாம்.

மேற்கூறியவற்றால், தன் கணவன் இறந்தபிறகு தான் மட்டும் வாழ விரும்பாத தமிழ்நாட்டுப் பெண்களின் குறிப்பாக பெரியபுராணத்தில் இடம்பெறும் பெண் அடியார்களின் பண்பினை அறிந்துகொள்ளலாம்.

**ஊ. கணவனது கொள்கைக்குத் துணையாக இருந்தபாங்கு**

கணவனது கொள்கைக்கு மனைவி உடன்பட்டு இருந்தால்தான், -உறுதுணையாக இருந்தால்தான் கணவன்

---

1. 'பெரியபுராணம்' ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணம் 398
2. 'பெரியபுராணம்' திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம், 32.

தனது கொள்கையில் நிலைத்து நின்று வெற்றியை அடைய முடியும். அவர்களது இல்வாழ்வும் சிறக்கும். இந்திய நாட்டுப் பெண்கள், "அன்புடைக் கணவர் அழிதகச் செயினும் பெண் பிறந்தார்க்குப் பொறையே பெருமை" என்ற நெறிப்படி வாழ்ந்து.தங்கள் கணவரது கொள்கைக்கு உறுதுணையாக இருந்து, அவர்களது உயர்வுக்கும் முன்னேற்றத்திற்கும் அடிப்படை ஆதாரமாகத் திகழ்ந்தவர்கள்.

இந்த பாரம்பரியத்தில் வந்த பெரியபுராணத்தில் இடம்பெறும் பெண்களும் மேற்குறிப்பிட்ட பண்பைப் போற்றிக் காத்தவர்களாகவே காணப்படுகின்றனர்.

இளையான்குடி மாற நாயனாரின் மனைவி அடியார் களுக்கு நாள்தோறும் உணவளிக்கும் தனது கணவரின் குறிக்கோளுக்கு முழு மனத்தோடு ஒத்துழைப்பு நல்கி உதவியவர். மிகுந்த வறுமையான சூழ்நிலையிலும் கூடச் சிறிதும் தளராது.பின்வாங்காது தங்களுக்கே உணவில்லாத இரவுப்பொழுதில் வந்த சிவனடியாருக்கு மிகவும் சிரம பட்டு உணவு சமைத்து அன்புடன் அமுது செய்வித்த பெருமைக்கு உரியவர்.

கலிய நாயனாரின் மனைவியார் திருக்கோபிலுக்கு நாள்தோறும் திருவிளக்குப்போடும் தனது கணவருடைய திருப்பணிக்கு உடந்தையாக இருந்தவர். இறையருளால் செல்வமின்றித் திருப்பணி தடைபட்டுக், கலிய நாயனார் மிகவும் வருந்தி தனது மனைவியை விற்று அதன் மூலம் கிடைக்கும் பொருளைக் கொண்டு திருவிளக்குப் போடும் தன் பணியைத் தொடரமுற்பட்ட போது, அதற்குச் சிறிது கூட எதிர்ப்புத் தெரிவிக்காமல் தனது கணவருடைய செய் கைக்கு ஆதரவாக நடந்து கொண்டவர் கலிய நாயனாரின் மனைவியார்.

கலிய நாயனாரின் மனைவியைத், தனது கணவரின் செயல்களுக்கு எதிர்ப்புத் தெரிவிக்காது உடன்பட்டு, ஒத்துழைப்பு நல்கி வாழ்ந்து வந்த பல லட்சக்கணக்கான இந்தியப் பெண்களின் ஒரு பிரதிநிதியாகவே கருதலாம்.

அரிவாள்தாயரின் மனைவி சிவபெருமானுக்கு அமுது செய்விக்கும் தன் கணவருடைய திருத்தொண்டிற்கு ஒத்துழைப்பு நல்கியும் செந்நெல் அரிசி கொண்டு உணவும் மாவடு, செங்கீரை ஆகியவற்றோடு திருவமுது செய்வித்த திலிருந்தும், தானும் தனது கணவரோடு பெருமானுக்குத் தேவையான நிவேதனப் பொருட்களைச் சுமந்து கொண்டு திருக்கோயிலுக்குச்சென்றதிலிருந்தும் அரிவாள்தாயருடைய மனைவியின் பண்பாட்டை அறிய முடிகின்றது.

**ஊ. திருமணத்திற்கு முன் உடலுறவை அனுமதிக்காதப் பண்பு**

வைப்பூர் கோன் **தாமன்** அவன் தனது ஏழு மகளிரில் மூத்தவளைத் தன்னுடைய மைத்துனனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதாகக் கூறிவிட்டு, பிறகு வேறொருவனு டன் நிறைய செல்வதைப் பெற்றுக் கொண்டு அவனுக்கே தனது மூத்த மகளை மணம் செய்து கொடுத்து விடுகின்றான்.

இப்படியே. தனது மற்ற ஆறுமகளிரில் ஐந்து மகளிரை மற்றவர்களுக்கே மணம் செய்து கொடுத்து விடுகின்றான் ஏழாவது பெண் தனது மாமன் மீது கொண்ட இரக்கத் தினால் அவனுடன் 'உடன் போக்கு' (ஓடிப்போய்விடுகின் றாள்) செய்து விடுகின்றாள்.

அவர்கள் இரவில் தனியே புறப்பட்டு வருகின்றனர் திருமருகல் என்னும் ஊரிலுள்ள சத்திரத்தில் நடைக் களைப்புத் தீர துயில் கொள்கின்றனர். அப்போது அவன் பாம்பினால் தீண்டப்பட்டு இறந்து விடுகின்றான். தனது

மாமனுக்குப் ஏற்பட்ட நிலை கண்டு, அவள் தன்நிலை தளர்ந்து அழுது அரற்றுகின்றாள். அழுது அழுது அவனது அருகிலேயே சோர்ந்து விழுகின்றாளே தவிர அவனைச் சிறிது கூடத் தொடவேயில்லை. அவளது உடலும் அவன் மீது படவேயில்லை.

திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற முடிவோடு புறப்பட்டு வந்த அவர்களுக்கு, முறைப்படி இன்னும் திருமணம் நிகழ்பெறவில்லை. அதற்குள் பாம்பு அந்த ஆடவனைத் தீண்டி அவன் உயிரைப் போக்கி விட்டது. முறையாகத் திருமணம் நிகழ்பெறாதக்காரணத்தால்தான் அவனைத் தொட்டு அழுவதற்குக்கூட அவள் உரிமையில்லாதவளாக ஆகிவிட்டாள்' என்பதைச் சேக்கிழார்,

**வாளரவு தீண்டவுந்தான் தீண்டஇல்லாள்** மறுமாற்றம்
மற்றொருவர் கொடுப்பாரின்றி
**ஆளரியேறு அனையானை அணுகவீழ்த்தே** அசைந்த
மலர்க் கொடிபோல்வாள் அரற்றும்போது[1]

என்று, 'எங்கிருந்தோ ஓடிவந்த பாம்புக்குக் கூட அவனைத் தீண்டிட உரிமையிருந்தும், தான் மட்டும் அவனைத் தீண்டிட உரிமையில்லாள்' - என்று குறிப்பிடுகின்றார்.

இந்த நிகழ்ச்சியிலிருந்து எவ்வளவுதான் நெருக்கமானவனாக இருந்தாலும், உறவினனாக இருந்தாலும் திருமணம் நிகழ் பெறுவதற்கு முன்னால் தன் உடலைத் தொட்டுப் பார்க்க கூட, அதேபோலத்தானும் அவனைத் தொடக் கூட அனுமதிக்காத-விரும்பாத பெண்மையின் பெருஞ்சிறப்பும்; எவ்வளவுதான் தன்னை விரும்புகின்றவ

1. 'பெரியபுராணம்' 'திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம் 474.

ளாக இருந்தாலும் திருமணம் நிகழ்பெறுவதற்கு முன்னால் அவளின் உடலைத் தொடுவதைக் கூட பண்புக் குறை வாகக் கருதுகின்ற ஆண்மையின் பெருமிதமும் தெரிய வருகின்றன.

**ஈ. பெற்றோர்கள் தேர்ந்தெடுத்தவர்களையே கணவனாகக் கொண்ட பண்பு**

பெரிய புராணத்தில் இடம் பெறும் பெண்கள் தங்கள் பெற்றோர்களால் பார்த்து நிச்சயம் செய்யப்பட்டவர் களையே தங்கள் கணவன்மார்களாக ஏற்றுக் கொண்ட னர்.

மானக்கஞ்சாரரின் மகள் தனது தந்தையாரால் பார்த்து நிச்சயம் செய்யப்பட்ட ஏயர்கோன் கலிக்கா மரையே தனது கணவராக ஏற்றுக்கொண்டார்.

காரைக்கால் அம்மையார் தனது தந்தையாராகிய தனதத்தனால் நிச்சயம் செய்யப்பட்ட பரமதத்தனையே திருமணம் செய்து கொண்டார்.

திலகவதியார் தனது தந்தையாரால் நிச்சயம் செய்யப் பெற்ற கலிப்பகையாரையே தனது கணவராக ஏற்றுக் கொண்டார்—என்பன போன்ற நிகழ்ச்சிகளிலிருந்து மேற் கூறப்பட்ட பண்பு புலனாகின்றது.



# 8. பெரியபுராணத்தில் சிறுவர் பண்பாடு

சிறுவயதிலிருந்தே நல்ல பண்பாட்டோடு வளர்ந்தால் தான் பெரியவர்களான பிறகும் மனிதர்களிடம் நல்ல பண்புகள் மிகுந்திருக்கும். சிறுவர்கள் உள்ளிட்ட மனிதர் அனைவருக்கும் தேவையான நற்பண்புகளை இதிகாசங் களும், சமய இலக்கியங்களும், புராணங்களும் எடுத்தியம்பு கின்றன. அக்கதைகளில் இடம்பெறும் மாந்தர்களெல்லாம் அவற்றில் கூறப்படுவன போன்ற வாழ்க்கையை வாழ்ந் தார்களா? இல்லையா? என்று ஆராய்வதை விட, அவற்றைக் கற்போர் அத்தகைய மேம்பட்ட வாழ்க்கையை வாழவேண்டும் என்றே அவ் இலக்கியங்களை இயற்றி யோர் விரும்பியிருக்கின்றனர் என்று கொள்ளலாம்.

பெரிய புராணத்தில் இடம்பெறும் கதைகளில் வரு கின்ற சிறுவர்களின் செயல்களைக் கூர்ந்து நோக்கினால், கீழ்க் காணும் பண்புகள் அவர்களிடம் மேலோங்கி இருந் தமை தெரியவருகின்றன.

அ. தன்னால் தன் தந்தைக்குப் பழிஉண்டாகக் கூடாது என்று கருதிய மனநிலை.

ஆ. குடும்ப நிகழ்ச்சிகளில் தன்னால் இயன்ற உதவிகளை செய்திட வேண்டும் என்று விரும்பிய மனப்பாங்கு.

இ. தன்னால் மகிழ்வான சூழல் கெடக்கூடாது என்று கருதியமை.

இவற்றை முறையே கீழே காணலம்.

**அ. தன்னால் தன் தந்தைக்குப் பழி உண்டாகக் கூடாது என்று கருதிய மனநிலை.**

மனுநீதிச் சோழனின் மகன் தேர்மீதேறி அரசவீதியில்

உலாச் சென்றான். அப்போது எங்கிருந்தோ ஓடிவந்த பசுக்கன்று தேர்ச்சக்கரத்தில் சிக்கித் தன் உயிரை இழந்தது. அதைக்கண்ட மனுநீதிச் சோழன் மகன் உணர்வொழிந்து மனம் மிக வருந்தி ''உலகையே காவல் புரிகின்ற மனுவேந்தனுக்கு இவ் உலகில் பழிவந்தடையும்படி பிறந்தேன்''[1] என்று தன்னால் தன் தந்தைக்குப் பழி உண்டாகும் சூழலை நினைத்து வருந்துவதாகச் சேக்கிழார் கூறுவதிலிருந்து மேற்குறித்தச் செய்தி புலனாகின்றது.

இக்காலச் சிறுவர்களுக்கு இத்தகைய பண்புருவாக்கம் கட்டாயத் தேவையாகின்றது. பல தந்தையர்கள் அதிலும் குறிப்பாக பல அரசியல் தலைவர்கள் தங்களது பதவியை/ஆட்சிசெய்யும் அதிகாரத்தை இழந்ததற்கும்; போக்கிக் கொள்ள முடியாப் பழியை அடைந்ததற்கும் காரணம் மேற்குறிப்பிடப்பட்ட பண்பு அவர்களுடைய புதல்வர்களுக்கு இல்லாதிருந்தமையேயாகும்.

### ஆ. குடும்ப நிகழ்ச்சிகளில் தன்னால் இயன்ற அளவு உதவிட வேண்டும் என்று விரும்பிய மனப்பாங்கு

அப்பூதி அடிகளாரது இல்லத்திற்குத் திருநாவுக்கரசர் வந்திருந்த போது, அவரை அமுது செய்விப்பதற்கான பணிகளில் அப்பூதியடிகளாரும், அவரது மனைவியாரும் ஈடுபட்டிருந்தனர். அப்போது, அவர்கள் தங்களது மூத்த மகன் திருநாவுக்கரசை அழைத்து விருந்து படைக்க வாழைக்குருத்து கொண்டு வருமாறு கூறினர். அப்போது மூத்ததிருநாவுக்கரசு மிகுந்த மனமகிழ்ச்சியோடு வாழைக் குருத்து கொண்டுவருவதற்காக விரைந்து ஓடினார்.

---

1. பெரியபுராணம், 'திரு நகரச் சிறப்பு', 25

இலையை அறுக்கும்போது பாம்பு கடித்து விடவே,பாம்பின் விடத்தினால் தான் இறப்பதற்குமுன் இலையைக் கொண்டு சென்று வீட்டில் கொடுப்பதற்காக ஓடோடி வந்தார். "வெய்ய வேகத்தால் வீழாமுன்னம் வேகத்தால் எய்திக் கொய்த இக் குறுத்தைச் சென்று கொடுப்பன்"[1] என்றோடி வந்தான் என்று சேக்கிழார் கூறுகின்றார். அடியார் விருந்துண்ணும் நிகழ்ச்சியில் தன்னுடைய பங்காக ஏதேனும் இருக்க வேண்டும்' என்று மூத்ததிருநாவுக்கரசு கருதியிருக்க வேண்டுமென்பது அவரது செயலிலிருந்து தெரிகின்றது.

"நல்லதாய் தந்தை ஏவ நான் இது செயப்பெற்றேன்"[2] என்று விரைந்தோடியதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

**இ. தன்னால் மகிழ்வானச் சூழல் கெடக் கூடாது என்று கருதியமை**

வாழைக்குருத்து அறுக்கப்போன மூத்த திருநாவுக்கரசை அரவு தீண்டியது. அவர் இச் செய்தியைத் தன்பெற்றோர்களிடம் கூறாது வாழைக்குருத்தை மட்டும் தன் தாயிடம் வைத்து விட்டுக் கீழே விழுந்து விடுகிறார்.

தன் தந்தையார் தனது வாழ்க்கையில் பற்றுக்கோடாகக் கொண்டிருக்கின்ற திருநாவுக்கரசர் தங்களது இல்லத்திற்கு வருகை தந்திருக்கும் இச்சமயத்தில் தனது தாய் தந்தையர் மகிழ்ச்சியில் திளைத்திருக்கும் இச்சமயத்தில்— அதுவும் திருநாவுக்கரசர் உணவு உண்ணப்போகும் இச்சமயத்தில் பாம்புக்கடித்த செய்தியைக் கூறித்தங்களது இல்லத்தில் நிலவும் மகிழ்வானச் சூழலையும், அமைதியையும் கெடுத்துவிடக்கூடாது என்பதற்காக மூத்ததிருநாவுக்கரசு, தன்னைப் பாம்பு கடித்த செய்தியைத்தன் பெற்றோர்களுக்குக் கூறாமல் மறைத்தார் எனக கருதலாம்.

1. பெரியபுராணம், அப்பூதியடிகள் புராணம்', 25.
2. பெரியபுராணம், 'அப்பூதியடிகள் புராணம்,' 24.

மனுநீதிச்சோழன், அப்பூதியடிகள் ஆகியோர்களுடைய புதல்வர்கள்,

'பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற'[1]

என்ற குறள் மொழிக்கு எடுத்துக் காட்டாகத்திகழ்ந் திருக்கின்றார்கள்.

**வழிபாட்டிற்கு இடையூறாகத் தந்தையே வந்த போதும் தயங்காது தண்டித்தமை:**

'இடையனை' வேண்டாம் என்று கூறிவிட்டு, மிகுந்த விருப்பத்தோடு பசுக்கூட்டங்களை மேய்த்திடும் தொழிலை செய்து வந்தவர் அத்தணரான **விசாரசர்மர்** (சண்டேசுவரர்). முன்னரை விட அதிகப் பால் சொரிந்தன அப் பசுக் கூட்டங்கள்.

மண்ணியாற்றங்கரையில் ஆத்திமர நிழலில் நாள் தோறும் கோயில்கட்டி, சிவலிங்கம் தாபித்து, வழிபாடி யற்றி வந்தார்சண்டேசுவரர். பசுக்களிட மிருந்து பாலை கறந்து சிவலிங்கத்திற்குத் திருமஞ்சனமாட்டி வந்தார். அதனால் பசுக்கள் குறைவாகப் பால் கறக்கவில்லை, எப் போதும் போலவே கறந்து வந்தன. சண்டேசுவரரின் இச் செய்கையைக் கண்டவர்கள் மிகுந்த கோபத்துடன் அவரது தந்தை எச்சதத்தனிடம் முறையிட்டனர்.

எச்சதத்தன் தனது மகன் விசாரசருமனின் செயல் களை மறைந்திருந்து கண்டார். சண்டேசுவரர் சிவலிங் கத்திற்குத் திருப்பள்ளித்தாமம் சாத்தி, குடங்கள் நிறைய விருந்த பாலை எடுத்து நீராட்டியதையும் கண்டார். மிகுந்த கோபத்துடன் அவர் தனது மகனை முதுகில் அடித்தார். வழிபாட்டிலேயே முழுக்கவனத்தோடும் கண்ணும் கருத்துமாக இருந்த சண்டேசுவரர் அதை உணர

---

1. திருக்குறள், 61

வில்லை. எச்சதத்தன் மேலும் மிகுந்த கோபத்துடன் திருமஞ்சனப் பால் குடங்களைத் தன் காலால் உதைத்துச் சிதற அடித்தான். அதனைக் கண்ட சண்டேசுவரர் பெருமானுக்குரிய திருமஞ்சனப் பாற் குடங்களைச் சிதைத்ததற்காகவும் வழிபாட்டிற்கு இடையூறாக இருந்ததற்காகவும் தனது தந்தையைத் தண்டிக்க எண்ணிஅருகில் கிடந்த கோலை எடுத்து தன்தந்தையின் கால்களை நோக்கி வீச, அக்கோல் மழுவாக மாறி அவரது தந்தையின் கால்களைத் துண்டித்தது.

சண்டேசுவரரின் இக்செய்கையிலிருந்து, தனது வழிபாட்டிற்கு இடையூறாகத் தனது தந்தையே வந்தபோது கூட அவரைத் தந்தை என்று கருதிவிட்டுவிடாமல் தண்டித்த செய்கை அவரது பக்திப் பண்பாட்டைப் பறை சாற்றுவதாக அமைந்துள்ளது.

அதனால்தான் பெருமான் அவரிடம் தோன்றி, ''நம் பொருட்டால் ஈன்ற தாதை விழ ஏறிந்தாய். அடுத்த தாதை இனி உனக்கு நாம்''[1] என்றுகூறி, ''அனைத்து நாம். உண்டகலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்காகச் சண்டீசனுமாம் பதந்தந்தோம்''[2] என்று கூறிச் சண்டீசப் பதத்தை நல்கி, அவரது திருமுடிக்குக் கொன்றை மலர் மாலை வாங்கிச் சூட்டியருளுனார்.

சண்டேசுவரர் எறிந்த கோல் மழுவாக மாறியதிலிருந்து உள்ளார்ந்த பக்தியோடும், முழுமையான அன்போடும் பெருமானை வழிபடுகின்றவர்களுக்கு,அவர்களது வழிபாட்டிற்கும், அவர்களுக்கும் இடையூறாக யாராவது செயல் படுவார்களேயானால் அவர்களைந் தண்டிப்பதற்

1. பெரியபுராணம், 'சண்டேசுர நாயனார் புராணம்', 54
2. 'பெரியபுராணம்','சண்டேசுர நாயனார் புராணம்'. 56

குக் 'கோல் மட்டுமா?, வழிபாடு செய்வோர்களால் எடுத்து வீசப்படுகிற புல்கூட ஆயுதமாக மாறும்' என்பது தெரிய வருகின்றது.

இந்திரனுடைய மகன் சயந்தன் காக்கை வடிவமெடுத்துக் கொண்டு வந்து சீதையுடைய மார்பகத்தைக் (முலையைக்)குத்தித் துன்புறுத்த - சீதையின் மார்பகத்திலிருந்து குருதி வடியக்கண்ட இராமபிரான் அருகிலிருந்த தர்ப்பைப் புல்லை எடுத்து மந்திரித்து சயந்தனை நோக்கி எறிய அது அம்பாக மாறி சயந்தனை அவன் சென்ற இடமெங்கும்துரத்திச் செல்ல,தப்பித்துக்கொள்ள வழியில்லாது -இயலாது போன சயந்தன் இறுதியில் சீதையிடமே வந்து சரணடைய, சீதையின் பறிந்துரையினால் இராமபிரான் அவனது ஒருகண்ணை மட்டும் அவ் அம்பினால் குருடாக்கும் படிச் செய்த வால்மீகிராமாயணச் செய்தி இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.



# 9. பெரியபுராணத்தில் பணியாளர் பண்பாடு

பெரிய புராணத்தில் காணப்படும் பணியாளர்களின் இயல்புகளையும் செயல்களையும் ஆழ்ந்து நோக்கினால் அவர்களிடம் கீழ்க்காணும் பண்பாட்டுக் கூறுகள் இருப்பது தெரிய வருகின்றன. அவர்களும் அவர்களது எசமானர் களைப் போலவே சிவன் கழலை மறவாத சிந்தையர் களாகவும், தங்களது எசமானர்களின் திருத்தொண்டிற்கு உறுதுணையாக இருந்தவர்களாகவும் விளங்குகின்றனர்.

அ. விருந்தினர்களை வரவேற்கும் திறம்

ஆ. குறிப்பால் உணர்ந்து கொண்டு செயலாற்றும் தன்மை

இ. கொடுக்கப்பட்ட பணியைச் சரியாகச் செய்யும் திறம்

ஈ. தன் தலைவரது சொற்படி நடந்த பண்பு.

## அ. விருந்தினர்களை வரவேற்கும் திறம்

சந்தனத் தாதையார் சிறுத்தொண்டர் வீட்டில் பணி யாளராக இருந்தவர். சிறுத்தொண்டர் அடியவர்கள் யாரும் வரப் பெறாமையால் அவர்களைத் தேடி வெளியே சென்றிருக்கும் போது, பெருமான் காபாலிக வேடத்தோடு சிறுத்தொண்டருடைய வீட்டிற்கு எழுந்தருளி "சிறுத் தொண்டர் உள்ளாரா?" என வினவ, அதைக்கேட்ட சந்தனத்தாதை வந்திருப்பவர் பெரிய தவசீலர்—சிவனடி யார் என்று உணர்ந்து அவருடைய திருவடிகளை வணங்கி,

"அந்தமில் சீர் அடியாரைத்தேடி அவர்
புறத்தணைந்தார்
எந்தமை ஆளுடையவரே! அகத்துளெழுந்தருளும்"[1]

என்று பணிவோடும், கனிவோடும் வரவேற்றதிலிருந்து சந்தனத் தாதையரின் விருந்தினர்களை வரவேற்கும் திறத்தினை அறியமுடிகின்றது.

### ஆ. குறிப்பால் உணர்ந்து கொண்டு செயலாற்றும் தன்மை

சிறுத்தொண்டரும் அவரது மனைவியாரும் தங்களது மகன் சீராளனை அறுத்துக் கறி சமைக்கும்போது, தலைக் கறியை உண்பதற்காகாது என்று ஒதுக்கிவிட்டனர் ஆனால், சந்தனத் தாதையார் அவர்களுக்குத் தெரியாமல் தலையைத் தனியே கறி சமைத்து வைத்திருந்தார்.

காபாலிகருக்கு உணவு படைக்கும்போது, திருவெண் காட்டு நங்கை, "தலைக்கறி அமுதுக்காகாதென்று ஒதுங்கி விட்டோம்"[2] என்று கூற காபாலிகர், "யாம் அதையும் உண்போம்"[3] என்று கூற சிறுத் தொண்டரும் அவரது மனைவியாரும் செய்வதறியாது திகைத்தனர்.

சந்தனத் தாதையார் தான் தனியே செய்து வைத் திருந்த தலைக்கறியைக் கொண்டு வந்து,

"......அந்தத்தலை இறைச்சி/வந்த தொண்டர் அமுது செயும்பொழுது நினைக்க வரும் என்றே, முந்த அமைத்

1. 'பெரியபுராணம்', சிறுத்தொண்டநாயனார் புராணம், 37
2. 'பெரியபுராணம்', சிறுதொண்ட நாயனார் புராணம், 74
3. 'பெரியபுராணம்', சிறுதொண்ட நாயனார் புராணம் 74

தேன் கறி அமுது"[1] என்று கூறி அதை எடுத்து கொடுத்தார்.

குழந்தைக்கறியையே விரும்பிச் சாப்பிடுகின்றவர் அக் குழந்தையுடைய தலைக்கறியை மட்டும் ஒதுக்கி விடவா போகின்றார்? என்று கருதி, சிறுத்தொண்டருக்கும் அவரது மனைவியாருக்கும் தெரியாமல் தலைக்கறியை மட்டும் தனியே சமைத்து, தக்க சமயந்தில் கொடுத்து உதவியமை யிலிருந்து சந்தனத்தாதையரிடம் இருந்த 'பிறர் குறிப் பினை உணர்ந்து செயலாற்றும்' தன்மையை அறிந்திட முடிகின்றது.

## இ. கொடுக்கப்பட்ட பணியைச் சரியாகச் செய்யும் திறம்

தத்தன் என்பவன் மெய்ப்பொருள் நாயனாரிடம் பாதுகாவலனாகப் பணியாற்றியவன். மெய்ப்பொருளார் தன் மனைவியோடு பள்ளியறையில் துயில் கொள்ளும் போது, முத்தநாதன் என்னும் அவரது எதிரி பலமுறை அவரோடு போரிட்டும் அவரை வெல்லமுடியாது அவர் வணங்கும் சிவனடியார் வேடத்தோடு அரண் மனைக்குள் வருகின்றான். தத்தன் தடுத்தும் நிற்காது பள்ளியறைக்குள் நுழைந்து விடுகின்றான். தத்தன் மிகவும் கவனத்தோடு முத்த நாதனின்செயல் களைக் கவனிக்கிறான். அவன் மெய்ப்பொருளாரைக் கொலைசெய்ய முற்பட்டபோது, தத்தன் விரைந்து சென்று முத்தநாதனைக் கொல்ல முனைகின்றான். இதிலிருந்து தத்தன் தனக்குக் கொடுக்கப் பட்ட பாதுகாவல் பணியைச் சரியாகச் செய்தமை தெரி கின்றது.

---

1. 'பெரியபுராணம்', சிறுதொண்ட நாயனார் புராணம், 75

### ஈ. தன் தலைவனது வார்த்தையைப் போற்றிக்காத்தது

மெய்ப்பொருளார் தன்னைக் கொலை செய்த முத்த நாதனை ஊர் எல்லை வரை பத்திரமாகக் கொண்டு சென்று விட்டுவிட்டுவருமாறு தத்தனிடம் கூற, தத்தனும் அவ்விதமே செய்ய முற்பட்டான். செய்தியறிந்த நகர மக்கள் மன்னனைக் கொன்ற முத்த நாதனைக் கொல்வதற்காகப் புடைசூழ்ந்தபோது தத்தன் அவர்களைத்தடுத்து "இத்தவன் போகப் பெற்றது இறைவனது ஆணை", என்று கூறி, அவனுக்கு எல்வித ஆபத்தும் ஏற்படாமல்[1] நகர எல்லை வரை கொண்டு சென்று விட்டு விட்டு வந்தான். மன்னனிடம் செய்தியைக் கூற.மன்னன் தத்தனிடம் "இன்று எனக்கு ஐயன் செய்தது யார் செய்ய வல்லார்"?[2] என்று தத்தனுக்கு நன்றி கூறுமுகத்தான் கூறினார்.

மன்னன் இறந்துபோம் தருவாயிலும் அவன் சொன்ன பணியைச் சிரமேற்கொண்டு சரியாகச் செய்த தத்தனின் திறம் பாராட்டத்தக்கதாக உள்ளது.



1. 'பெரியபுராணம்,' 'மெய்ப்பொருள் நாயனார் புராணம்' 18
2. 'பெரியபுராணம்', 'மெய்ப்பொருள் நாயனார் புராணம்', 21

# 10. பெரியபுராணத்தில் ஆட்சியாளர் பண்பாடு

பெரியபுராணத்தில் ஆட்சியாளர் பண்பாடு எனும் இவ் இயல் அரசர்களாக, குறுநில மன்னர்களாக இருந்த சிவனடியார்களின் வாழ்க்கை நிகழ்வுகளிலுள்ள பண்பாட்டுக் கூறுகளை எடுத்தியம்பும் நோக்கில் அமைகின்றது.

பெரிய புராணத்தில் இடம் பெறும் மன்னர்கள் அன்பும், அருளும், நீதியும், செங்கோற் சிறப்பும் உடையவர்களாக இருந்தனர்.

'மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் அய்ந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ''[1]

என்று, மன்னனாலும், அவனது பரிசனத்தினராலும், பகைவர்களாலும், கள்வர்களாலும், விலங்குகளாலும் குடிமக்களுக்கு உண்டாகும் பயத்தைப் போக்கி அவர்களைக் காப்பவனே சிறந்த மன்னனாவான் என்று மன்னனுடைய கடமைகளைச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

மன்னன் இல்லாத உலகம் உயிர் இல்லாத உடலுக்குச் சமமாகும் என்னும் பொருள்பட

'மன்னனை இன்றி வாழும் மண்ணுலகு எண்ணுங்காலை
இன்னுயிர் இன்றிவாழும் யாக்கையை ஒக்கும்''[2]

---

1. பெரியபுராணம்; திருநகரச் சிறப்பு; 36
2. பெரியபுராணம் 'மூர்த்திநாயனார் புராணம்', 29

என்றும் குறிப்பிடுகின்றார்.

கம்பர், தயரதனைக் குறிப்பிடும்போது,

"உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்"[1] என்று கூறுகின்றார்.

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகு"[2]

என்று, சங்கப் பாடல் மன்னனை உயிராகவும், மக்களை உடலாகவும் குறிப்பிடுகின்றது.

சங்ககாலம் தொடங்கி, சேக்கிழார் காலம் வரை தொடர்ந்து வந்த "மன்னன் உயிர்; மக்கள் உடல்" எனும் அரசியல் கோட்பாடு கம்பர் காலத்தில், "மன்னன் உடல்; மக்கள் உயிர்" என்று மாறிவிட்டமை தெரியவருகின்றது.

அரன் திருவடிகளை இதயத்திலிருத்திக் கொண்டு, உலக உயிர்களை எல்லாம் தன் உயிராகக் கருதிக் கொண்டு செம்மையாக ஆட்சி நடாஅத்திய ஆட்சியாளர் களின்—சிவனடியார்களின் பண்புக் கூறுகள் அ. சேரர், ஆ. சோழர், இ. பாண்டியர், ஈ. குறுநில மன்னர்கள் எனும் தலைப்புக்களில் ஆராயப் பெறுகின்றன.

## அ. சேரர்

### சிவபக்தி

சேரமான் பெருமாள் நாயனார் சேரமன்னர். ஒப் பற்ற சிவபக்தியை உடையவர்.

---

1. கம்பராமாயணம் 'அரசியற்படலம்', 10
2. புறநானூறு, 186

நீடும் உரிமைப் பேரரசால் நிகழும் பயனும் நிறை
தவமும்
தேடும் பொருளும் பெருந்துணையும் தில்லைத்
திருச்சிற்றம்பலத்துள்

ஆடுங்கழலே''[1]

எனத் தெளிந்து நாள்தோறும் சிவபெருமானுக்கு அர்ச்சனைகள் செய்து வந்தவர். அவரது அர்ச்சனைகளைப் பெற்று மகிழ்ச்சியடைந்த பெருமான் நாள்தோறும் தனது பாதச் சிலம்பொலியை அவருக்கு அளித்துவந்தார். இதனால் சேரமானது சிவபக்திச்சிறப்பை அறிய முடிகின்றது.

**சிவனடியார் பக்தி**

சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரரை யானை மீதேற்றித் தான் அவருக்கு வெண்சாமரம் வீசியதிலிருந்தும், அவரது திருவடிகளை நீரால் கழுவியமையிலிருந்தும் அவரது சிவனடியார் பக்தியை உணரமுடிகின்றது.

சேரமான் பெருமாள் யானைமீதேறி திருக்கோயிலுக்குச் சென்று, பெருமானை வழிபாடு செய்து விட்டு, நகர்வலம் வரும்போது, உவர்மண் பொதியைச் சுமந்து வந்த வண்ணான் ஒருவன் மழையில் நனைந்து பின் வெயிலால் காய்ந்து வரும்போது, அவனுடைய உவர்மண் ஒட்டிய வெண்ணிற உடலைக் கண்ட சேரமான், திருநீறு பூசிய சிவனடியாராகவே அவனைக் கொண்டு யானையை விட்டுக் கீழே இறங்கி அவனது காலில் விழுந்து வணங்கினார். அவன் பயந்துபோய்

---

1. பெரியபுராணம் 'கழறிற்றறிவார் நாயனார் புராணம்; 23

"யாரென்று அடியேனைக் கொண்டது **அடியேன்**
**அடிவண்ணான்**"[1] — என்று கூற,

சேரர் பிரானும், '**அடிச்சேரன் அடியேன்**'[2] என்று கூறி,

"திருநீற்றின் வார வேடம் நினைப்பித்தீர் வருந்தாது ஏகும்"[3] என்று கூறி அவனைச் செல்லுமாறு கூறினார். மேற்கூறப்பட்ட செய்தியிலிருந்து சேரமானின் அடியார் பக்தியை அறிய முடிகின்றது.

## ஆ. சோழர்

சோழன் கோச்செங்கணான் சிறந்த சிவபக்தன். இவனைப் பற்றிச் சேக்கிழார்'

"......................... ....பெருந்தண் சிவாலயங்கள்
காத லொடும் பல எடுக்கும் தொண்டு புரியுங்
கடன் பூண்டார்[4]

என்று கூறுவதிலிருந்து அவன் பல சிவாலயங்களைக் கட்டியுள்ள செய்தியும்,

பானற் களத்துத் தம்பெருமான் **அமருங்கோயிற் பணி**
**சமைத்தார்**[5]

---

1. பெரியபுராணம் 'கழறிற்றறிவார் நாயனார்' புராணம்', 19
2. பெரியபுராணம் 'கழறிற்றறிவார் நாயனார்' புராணம்,' 19
3. பெரிய புராணம் 'கழறிற்றறிவார் நாயனார்' 19
4. பெரியபுராணம் 'கோச்செங்கட்சோழ நாயனார்' புராணம்', 12
5. பெரியபுராணம் 'கோச்செங்கட் சோழ நாயனார் புராணம்', 13

என்று கூறுவதிலிருந்து, பல சிவாலயங்களுக்கு இவன் திருப் பணிகள் பல செய்த செய்தியும்,

அந்த மில்சீர்ச் சோணாட்டில் அகனாடு தொறுமணி யார்
சந்திரசே கரன் அமரும் தானங்கள் பலசமைத்தார்[1]

என்று கூறிவதன் மூலம், சோழநாட்டின் உள்நாட்டுப் பகுதி களில் அமர்கின்ற இடங்கள் பல அமைத்தச் செய்தியும்,

அக்கோயில் தொறுச்சிவனுக் கமுதுபடி முதலான
மிக்கபெருஞ் செல்வங்கள் விருப்பினால் மிக
அமைத்து[2]

என்றுசேக்கிழார் கூறுவதன்மூலம் திருக்கோயில்கள்தோறும் சிவனுக்கு அமுதுபடியும், மிக்க செல்வமும் கொடுத்துதவிய செய்தியும் தெரிய வருகின்றன.

மேற்கூறிய கோச்செங்கணானைப் பற்றிய செய்தி களால் அவனிடமிருந்த சிவபக்தியை அறியமுடிகின்றது.

**சிவபக்தி**

சோழமன்னர் புகழ்ச்சோழர் சிறந்த சிவபக்தியையும், சிவனடியார் பக்தியையும் உடையவர். இவர், சிவாலயங் களில் நாள்தோறும் பூசைகள் நிகழ்பெறுவதற்காகவும், சிவனடியார்களின் குறையைப் போக்க அவரது குறிப்பறிந்து நிறைய பொருள் கொடுத்தும் உதவினார் என்பது,

---

1. பெரியபுராணம் 'கோச்செங்கட்சோழ நாயனார் புராணம்', 14
2. பெரியபுராணம் 'கோச்செங்கட்சோழ நாயனார் புராணம்', 15

பிறை வளருஞ் செஞ்சடையார் பேணுசிவா
லயமெல்லாம்
நிறைபெரும்பூ சனைவிளங்க நீடுதிருத்
தொண்டர்தமைக்
குறையிரந்து வேண்டுவன குறிப்பின்வழி
கொடுத்தருளி
முறைபுரிந்து திருநீற்று முதல்றெியே பாவிப்பார்.

என்று சேக்கிழார் கூறுவதனாலும் தெரிகின்றது.

புகழ்ச் சோழரது பட்டத்து யானை பெருமானுடைய பூசனைக்காக மலர்கொண்டுவந்த சிவகாமியாண்டாரது பூக்கூடையைச் சிதறிவிட்டது யானையின் அக்கொடிய செயலுக்காக அந்த யானையையும், அதை அடக்கத்தவறிய தற்காக அதன் பாகர்களையும் வெட்டி வீழ்த்தினார் **எறிபத்தர்**. என்கிற சிவனடியார்.

இதைக் கேள்வியுற்ற புகழ்ச்சோழர் 'சிவனடியார்கள் தவறு செய்யமாட்டார்கள்' என்று கூறி, நிகழ்ந்ததற்கு மன்னிப்பை வேண்டி, எறிபத்தரிடம் தன்னையும் வெட்டு மாறு கூறி, அவரது (எறிபத்தரது) மழுவால் வெட்டினால் அந்த மழுவுக்கு இழுக்கு என்று கூறித் தனது உடைவாளை எடுத்துக்கொடுத்தார்.

**சிவனடியார்பக்தி**

புகழ்ச்சோழரின் படைவீரர்கள் போரின்போது போர்க் களத்தினின்று கொண்டுவந்த தலைகளில் ஒருவீரரின்தலை **'சடைத்தலையாக'** இருந்ததைக்கண்டு, அத்தலை சிவனடி யார் ஒருவரின் தலையாக இருக்கும் என்று கருதித் தன்னுடைய கண்களிலிருந்து கண்ணீர் சொரிதர மிகுந்த மனவருத்தம் அடைந்தார் புகழ்ச்சோழர்.

---

1. பெரியபுராணம், 'புகழ்ச்சோழ நாயனார் புராணம்', 10

"திருநீற்றின் நெறி புரக்கவும், சைவம் தழைக்கவும் அரசு இயற்றுவோன்யானே"[1] என்று கதறினார்.

"தீர்க்க இயலாப் பழிதாங்கினேன்" என்று மனம் கவன்றார்.

அது மட்டுமின்றி அச் சடைத்தலையை ஒரு பொற்றட்டில் வைத்துத் தன் தலைமீது வைத்துக் கொண்டு வலம் செய்து-பெருமானின் திருஅய்ந்தெழுத்தை (சிவாயநம) ஓதிக்கொண்டே அவ் எரியினுள் புகுந்து தன் உயிரை நீத்தார்.

இந் நிகழ்ச்சியிலிருந்து புகழ்ச்சோழர் கொண்டிருந்த சிவபக்தியையும் சிவனடியார் பக்தியையும் அறிய முடிகின்றது.

**சிவபக்தி**

பெருமானுடைய பூசனைக்கு வேண்டிய பொருட் செல்வங்களை, ஆகமங்கள் கூறிய நெறிப்படி திருக்கோயில் களுக்கு நிபந்தங்களாக வழங்கி பெருமானுக்குரிய பூசனைகள் சரியாக நிகழ்பெற ஏற்பாடு செய்தவன் **மனு நீதிச் சோழன்** என்பதால் அவனுடைய சிவபக்தியையும் உணர முடிகின்றது.

**ஆட்சிசெய்ததிறம்**

உலக உயிர்களுக்கு எல்லாம் கண்ணும், ஆவியுமாகத் திகழ்ந்து ஆட்சி செய்தவன். தேவர்களும் மகிழ்ந்திடத் தக்க வகையில் உலக உயிர்களின் நன்மைக்காக வேள்விகள் பல இயற்றியவன். அறம், பொருள், இன்பம் என்ற அற நெறியை வழுவாமற் காத்து அரசர்களெல்லாம் போற்ற ஆட்சி செய்த சிறப்புடையவன்.

1. பெரியபுராணம், 'புகழ்ச்சோழ நாயனார் புராணம்'. 35

**நீதி வழங்கிய திறம்**

தேரின் மீதேறி, அரசவீதியில் உலாச் சென்ற தனது மகனுடைய தேரின் பின் சக்கரத்தில், ஓடி வந்து சிக்கிக் கொண்டு தன்னுடைய உயிரைவிட்டது ஒரு பசுவின் கன்று.

கன்று இறந்த சோகந்தாளாமல் ஆராய்ச்சி மணியை அடித்து நீதி கேட்டது தாய்ப் பசு.

பசுவின் கன்றைத் தனது மகன் கொன்ற பாவத்திற்காக, வேதத்தால் விதிக்கப்பட்ட பரிகாரத்தைச் செய்திட, நீதியை வழங்கிட முற்படாமல், அத்தாய்ப் பசு அடைந்த துயரத்தையே தானும் அடையவேண்டும் என்று, தானே தேர்மேலேறித் தனது மகனைத் தேர்ச் சக்கரத்தின் கீழ்ப் படுக்க வைத்து, அவன் மீது தேரினை ஏற்றிக் கொன்றான் மனுநீதிச்சோழன்.

ஒரு பசுவுக்கு நீதி வழங்கவேண்டி, அப்பசு அடைந்த துன்பத்தையே தானும் அடைந்திடவேண்டும் என்று கூறித் தனது ஒரே ஒரு மகனையே தேர்க்காலில் இட்டு, தேர் ஏற்றிக் கொன்று, அப்பசு அடைந்த துன்பத்தையே தானும் அடைந்த மனுநீதிச் சோழனுடைய நீதி வழங்கும் திறம் போற்றுதற்குரியது. இக்காலத்தில் ஆட்சியாளர்களும் மக்களும் இன்றியமையாது பின்பற்றிட வேண்டிய தேவையைக் கொண்டது.

ஓர்ந்து கண்ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
தேர்ந்துசெய்வஃதே முறை[1]

என்ற குறள் வரிகளுக்கு இலக்கியமாய்த் திகழ்வது.

---

1. திருக்குறள், 541

## பாண்டியர்கள்

### உண்மையை ஏற்கும் பண்பு

கூன்பாண்டியன் 'சமணசமயமே உண்மைச்சமயம் பிற சமயங்கள் அதற்கு மாறானது' என்று நம்பி, சமணத்தைச் சார்ந்து ஒழுகி வாழ்ந்து வந்தான். பிறகு சமண முனிவர்களால் தீர்க்கப்படாத தனது சூலை நோய் ஞான சம்பந்தரால் தீர்க்கப்பட்டு, கூனும் நீங்கி, நின்ற சீர் நெடுமாறனானான். மேலும், ஞானசம்பந்தர் அனல் வாதம், புனல்வாதம் செய்து சைவமே உண்மைச்சமயம் என்று நிலைநாட்டிய பிறகு பாண்டியன் நின்ற சீர் நெடு மாறனும் சமண சமயத்தை விட்டு விலகிச் சைவ சமயத்தைச் சேர்ந்தான்.

இந்நிகழ்ச்சிகளிலிருந்து, 'இதுதான் உண்மை' என ஒன்று நிலைநாட்டப்பெற்ற பிறகு, பாண்டியன் நின்ற சீர் நெடுமாறன், தான் கொண்டிருந்த போலித்தனமான பொய்மைகளை விட்டுவிட்டு உண்மையின் பக்கம் சாரும் பண்புடையவன் என்பதை அறியமுடிகின்றது.

### பிறசமயக் காழ்ப்பின்மை

பாண்டியன் நின்ற சீர் நெடுமாறன் சமணனாக இருந்தபோது அவனது மனைவி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் சைவ சமயத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தனர். அதோடு சைவ நெறியையும் பரப்பினர். பாண்டி மண்டலத்தில் சைவ நெறி புத்துயிர்பெற உழைத்த மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோரது சமய விவகாரத்தில் மன்னன் தலையிடாததிலிருந்து அவனது பிற சமய வெறுப்பின்மையை உணர முடிகின்றது.

## பல்லவர்கள்

### சிவபத்தி

'அரச பதவி இன்னல்தருவது' என உணர்ந்து அதைத் தனது மகனிடம் கொடுத்து விட்டுத் தான் பல சிவாலயங்களுக்குச் சென்று பெருமானை வழிபட்டுச் சிவத் தொண்டுகள் பல செய்தவர் **ஐயடிகள் காடவர்கோன்** பெருமானைத் துதித்துப் பாடல்கள் பல பாடியருளியவர். பல கோயில்களுக்குத் திருப்பணிகளும் செய்தவர். இதனால் ஐயடிகள் காடவர் கோனுடைய சிவபக்தித் திறனை அறியலாம்.

மிகுந்த பொருள் படைத்தவர்களும், வயதான அரசியல் வாதிகளும் மேன்மேலும் பொருள் தேடவேண்டும், பதவிகளைப் பெற வேண்டும், புகழ்பெற வேண்டும் என்றில்லாமல் பதவிகளை 'இன்னல் தருவன என உணர்ந்து அதனை விரும்பாமல், பெருமானிடம் பக்தி கொண்டு, அவனது திருக்கோயில்களுக்குத் திருப்பணிகள் பல செய்திட வேண்டும் என்பதற்கு ஐயடிகள் காடவர் கோன் முன்னோடியாகத் திகழ்ந்திருக்கின்றார் எனக் கருதலாம்.

### ஆட்சித்திறம்

ஐயடிகள் காடவர்கோன் அரசராயிருந்தபோது, ''சேணிலத்தில் எவ்வுயிரும் பெருமையுடன் இனிதமர'' பிற நாடுகளை அடிமைப்படுத்தி அந்நாடுகளுக்கெல்லாம் நல்லாட்சியை வழங்கியவர். தருமநெறி தழைத்தோங்கவும், சைவநெறி விளங்கிடவும் ஆட்சி செய்தவர் என்பதனால், அவர் 'எல்லா உயிர்களும் மகிழ்வோடும் பெருமையோடும் வாழ்வதற்காகவே பல நாடுகளை அடிமைப்படுத்தி ஆட்சி செய்தவர்' என்பதை அறிய முடிகின்றது.

பிறநாட்டிலுள்ள இயற்கை வளங்களையும், மனித ஆற்றலையும் சுரண்டுவதற்காகவென்றே பலநாட்டினரை அடிமைப்படுத்தி வருகின்ற ஏதேச்சாதிகாரத்தனமும், பாசிசத்தனமும் மிகுந்து வருகின்ற இக்கால கட்டத்தில் எல்லா உயிர்களுக்கும் மகிழ்ச்சியையும், பெருமையையும் அளிக்கும் ஆட்சியை வழங்குவதற்காகவே பிற நாடுகளை அடிமைப்படுத்திய ஐயடிகள் காடவர்கோனின் பண்பு நலம் ஒப்புநோக்கிப் பாராட்டத்தக்கதாக உள்ளது.

**சிவபக்தி**

பல்லவ மன்னன் கழற்சிங்கர் மிகுந்த சிவபக்தி உடையவர். பல சிவாலயங்களுக்குச் சென்று பெருமானை வழிபட்டு, பல மெய்த்தொண்டுகள் இயற்றியவர்.

> குவலயத்து அரனார் மேவும் கோயில்கள் பலவுஞ்
> சென்று
> தவலரும் அன்பில்தாழ்ந்து **தக்கமெய்த் தொண்டு**
> **செய்வார்**[1]

என்று சேக்கிழார் கூறுவதனால் கழற்சிங்கரின் சிவபக்தித் திறனையும் அவரது தொண்டையும் அறியலாம்.

ஒருநாள் தனது மனைவியுடன் ஆரூர்ப் பெருமானைத் தரிசனம் செய்யச்சென்றார் கழற்சிங்கர். அப்போது திருக்கோயில் பூமண்டபத்தில் வீழ்ந்த புதிய மலரை அரசியார் எடுத்து முகர்ந்து விடுகின்றார். அதைக் கவனித்த **செருத்துணையார்** என்னும் சிவனடியார் அவரது செய்கைக்காக அவருடைய மூக்கை அறுத்து விடுகின்றார். அதைக் கேள்வியுற்றுக்கண்ட மன்னர் கழற்சிங்கர், செருத்துணையாரின் செயலைக் கண்டிக்காமல் பெருமானுக்குரிய மலரை எடுத்து முகர்ந்த குற்றத்திற்காகத் தனது மனைவியின்

1. பெரியபுராணம், 'கழற்சிங்க நாயனார் புராணம்', 3.

கையையும் (மலரை எடுத்த குற்றத்திற்காக அந்தக்கையை) வெட்டி விடுகின்றார்.

இதிலிருந்து, பெருமானுக்குரிய மலரை எடுத்து முகர்ந்த குற்றத்திற்காகத் தனது மனைவியின் மூக்கை அறிந்த செருத்துணையாரின் செயலைக்கண்டிக்காமல், குற்றத்திற்கானதண்டனை அதோடுபோதும் என்றும் விட்டு விடாமல், மலரை எடுப்பதற்கு துணை புரிந்த தனது மனைவியின் கையைத் தானும் வெட்டி வீழ்த்துவதிலிருந்து கழற்சிங்கர் கொண்டிருந்த சிவபக்தியின் வலிமையை -சிறப்பை உணர முடிகின்றது.

**ஒருமைப்பாடு**

சேக்கிழார் சாதி, இன வேறுபாடு தவிர்ந்த சமய அடிப்படையிலான ஒருமைபாட்டை - தமிழ்த்தேசிய ஒருமைப்பாட்டை பெரிதும் விரும்பியிருக்கின்றார். இவ் விருப்பத்தைக் சுழறிற்றறிவார் புராணத்தில் பதிவு செய் திருக்கின்றார்.

சேரமான் பெருமாள், பெருமானைத் தரிசனம் செய் வதற்காகத் திருமறைக்காட்டிலிருந்து மதுரைக்குச் செல் கின்றார். அங்கு பாண்டிய மன்னனோடு சோழ மன்னனும் (பாண்டியன் மகளைத் திருமணம் செய்து கொள்வதற்கு முன்னரே சோழமன்னன் பாண்டிய மன்னனோடு மதுரை யில் இருந்தான்) வீற்றிருக்கின்றான்.சேரமான் பெருமாளை யும், சுந்தரரையும் பாண்டியன் இனிதே வரவேற்கின்றான். மூவேந்தரும் ஒருவரோடொருவர் அளவளாவி மகிழ்ந்து சுந்தரருடன் ஆலவாய்ப் பெருமானைத் தொழுது இறைஞ்சுகின்றனர்.

ஆலவாய் அண்ணலைத் தொழுது இறைஞ்சிய பின் பாண்டியன் சேர, சோழனையும், சுந்தரரையும் தன்னுடன்

அழைத்துச் சென்று பல நாட்கள் அவர்களை உபசரித்து அவர்களோடு அளவளாவி மகிழ்ந்தான்.

"உளமகிழக் கும்பிட்டங்கு உறையுநாள் உதியருடன்
..................................................................
வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோடு
அளவளா வியவிருப்பால் அமர்ந்து கலந் தினி
திருந்தார்"[1]

என்று சேக்கிழார் குறிக்கின்றார்.

இந்நிகழ்ச்சியைச் சேக்கிழார் மிக அழகாக ஒளியூட்டிக் காட்டுவதன் மூலம் மூவேந்தரும் தங்களுக்குள் இருந்த இனவேறுபாட்டை மறந்து, நாட்டெல்லைகளை மறந்து ஒற்றுமையாகத் திகழவேண்டும்; என்றும் தமிழ்த் தேசம் பேசுகின்ற மொழியடிப்படையில்-பண்பாட்டடிப்படையில் ஒற்றுமையாகத் திகழவேண்டும் என்றும் அவர் விரும்பி யிருக்கின்றார் என்பது புலனாகின்றது.

**குறு நிலமன்னர்கள்**

'கோனாடு' என்னும் நாட்டை ஆண்டவர் **இடங்கழி யார்.** சிவபக்தியை உடையவர். சைவநெறி வைதீகத்தின் தரும நெறியோடு தழைக்க அரசு இயற்றியவர். பெருமா னின் கோயில்களில் வழிபாடுகளும் அருச்சனைகளும் விதிப் படி விளங்கி நிகழ்பெற நிறைய பொருளுதவியவர்.

சிவனடியார்களுக்கு உணவளிப்பதையே குறிக்கோ ளாகக் கொண்ட சிவனடியார் ஒருவருக்கு, ஒரு நாள், உணவளிக்க நெல் கிடைக்காமற் போகவே, அவர் இடங்கழியாரது அரண்மனைக் கிடங்கிற்புகுந்து நெல் திருடினார். இடங்கழியார் அவரை நெல் திருடிய குற்றத்திற்காகத் தண்டிக்காமல் 'இவரல்லவோ மூல பண்டாரம்' என்று கூறி, மீதமுள்ள கிடங்குகளையும்

1. பெரியபுராணம், 'கழறிற்றறிவார் நாயனார் புராணம்', 96

திறந்து விட்டு வேண்டுமளவுக்கு நெல்லையும், மற்ற பொருட்களையும் கொண்டு செல்லுமாறு கூறினார்.

இந்த நிகழ்ச்சியிலிருந்து சிவனடியார்களுக்கு உதவிட வேண்டும், சிவனடியார்களுக்கு உணவு அளித்து ஓம்புகின்ற வர்களைப் பாதுகாத்திடவேண்டும். என்கிற, இடங் கழியாரது, **சிவனடியார்களை ஓம்பிப் பாதுகாத்திடும்** அவரது பண்பை அறிய முடிகின்றது.

**நரசிங்கமுனையரையர்**

'திருமுனைப்பாடி' நாட்டையாண்டவர் நரசிங்க முனையரையர். பெருமானுடைய திருக்கோயில்களுக்குத் திருச்செல்வத்தைப் பெருக்கும் பணியைத் தொடர்ந்து செய்து வந்தவர்.

ஒவ்வொரு திருவாதிரை நாளிலும் பெருமானுக்கு வழிபாடாற்றிப் பூசனைகள் செய்து, சிவனடியார்களை அமுது செய்வித்து ஒவ்வொருவருக்கும் நூறு பொன் கொடுத்து வந்தார்.

'மானநிலை அழிதன்மை **வருங்காமக் குறிமலர்ந்த**
ஊன நிகழ் மேனியராய்''1 வந்த-தூர்த்தராக வந்த

சிவனடியாரை மற்றவர்கள் இகழக்கூடாது என்பதற்காகத் தானே முதலில் அவரை வணங்கித்தொழுது முகமன் கூறி அவருக்கு மட்டும் இரட்டிப்பாக இருநூறு பொன் கொடுத்து அனுப்பிவைத்தார்.

இதிலிருந்து நரசிங்கமுனையரையரது **சிவனடியாரை உபசரிக்கும் பண்பும், சிவனடியாரை மற்றவர்கள் இகழக் கூடாது** என்று கருதும் மனநிலையும் வெளிப்படுகின்றன.

---

1. பெரியபுராணம், 'நரசிங்கமுனையரைய நாயனார் புராணம்', 5

**மெய்ப்பொருளார்**

சேதிநாட்டை ஆண்டவர் மெய்ப்பொருளார். சிவனடியார்கள்மீது கொண்ட அன்பினால் அவர்களது விருப்பத்தினையறிந்து அவர்களது தேவைகளை நிறைவேற்றி வந்தவர்.

எப்போதும் அடியவர் வேடத்தையே சிந்தையில் தியானித்து வந்தவர்.

> **"தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்**
> **ஆடிய பெருமான் அன்பர்க்கு ஆவன ஆகும்** என்று
> நாடிய மனத்தினோடு நாயன்மார் அணைந்த போது
> கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து
> வந்தார்.[1]

என்று சேக்கிழார் குறிப்பிடுவதன் மூலம் மெய்ப் பொருளார் அடியார்களுக்குச் செல்வமளித்து அவர்களை உபசரித்த திறம் விளங்குகின்றது.

மெய்ப்பொருளாரிடம் பலமுறை போரிட்டுத் தோற்றுப்போன முத்தநாதன் என்பவன் சிவனடியார் வேடம் புனைந்துகொண்டு அரண்மனைக்குச் சென்று மெய்ப்பொருளாரைக் கொன்று விடுகின்றான். அவனுக்கு எவ்வித இடையூறும் நேராதவாறு அவனைப் பாதுகாப்பாக நகர எல்லை வரை கொண்டு சென்று விட்டு விட்டு வருமாறு தனது பாதுகாவலன் தத்தன் என்பவனுக்கு ஆணையிடுகின்றார் மெய்ப்பொருளார்.

மெய்ப் பொருளாரின் மேற்குறித்த செய்கையிலிருந்து, தன்னைக் கொன்றவன் தனது பகைவனாகவே இருந்தா

---

1. பெரியபுராணம், 'மெய்ப்பொருள் நாயனார் புராணம்', 4

லும், அவன் சிவனடியார் வேடம் புனைந்து கொண்டு வந்திருந்ததால் அவனை ஒன்றும் செய்யாமல் விட்டமையிலிருந்தும் அவர் சிவனடியார் மீது கொண்டிருந்த அன்பும், பக்தியும் வெளிப்படுகின்றன.

**கூற்றுவர்**

'களந்தை'யைத் தலை நகராகக் கொண்டு ஆட்சி செய்தவர் **கூற்றுவர்.**

இவர் பெருமானின் திருநாமத்தை நாள்தோறும் நாவில் நவிலும் பண்புடையவர். அருளின் வலிமையால் அவனியை அடிப்படுத்தியவர். பல நாடுகளைத் தன் திறமையால் வென்று வாகைசூடியவர். பெருமான் எழுந்தருளியிருக்கின்ற பலதிருக்கோயில்களுக்குச் சென்று பூசனைகள் பல இயற்றிக் கொண்டிருந்தவர். இதனால் கூற்றுவரது சிவபக்தி புலனாகின்றது.

இவர், தில்லை வாழ் அந்தணர்களிடம் சென்று, தனக்கு முடி சூட்டுமாறு வேண்ட, அவர்கள் சோழர்கள் தவிர மற்றவர்களுக்குத் தாங்கள் முடி சூட்ட மாட்டோம் என்று மறுத்து விட, அவர்களை ஒன்றும் செய்து விடாது அவர்களது விருப்பத்தின்படியே அவர்களைச் சேர நாட்டிற்குச் செல்ல அனுமதித்த பண்பாளர்.

மேற்கூறப்பட்ட **ஆட்சியாளர் பண்பாடு'**— எனும் இவ் இயலிலிருந்து சேரர், சோழர், பாண்டியர், பல்லவர், குறுநில மன்னர் ஆகியோரிடம் அமைந்திருந்த சிவபக்தியின் திறமும், அவர்கள் சிவனடியார்களை உபசரித்தப் பாங்கும், சிவாலயங்களுக்கு அவர்கள் செய்தளித்த திருப்பணிகளும்-இன்னபிற செய்திகளும் தெரிய வருகின்றன.





# 11. சிவனடியார்களின் சில சமூக உயர் நாட்டங்கள்

"உண்டாலம்ம இவ்வுலகம்
தமக்கென முயலா நோன்றாள் பிறர்க்கென
முயலுநர் உண்மையானே"[1]
— என்ற புறப்பாடல்

தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழ்பவர்கள் இருப்பதால்தான் இந்த உலகமே இருக்கின்றது என்றும், வள்ளுவப் பெருந்தகை,

பண்புடையார் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்[2]

என்று, பண்புடையவர்கள் இருப்பதால்தான் இவ்வுலகம் இருக்கின்றது. அவர்கள் இன்றேல் அழிந்து விடும் என்றும் கூறுகின்றார். சான்றோர்கள், 'மனிதர்கள் தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழவேண்டும்" என்றும், பண்புடையவர்களாக இருக்கவேண்டும்" என்றும் விரும்பியிருக்கின்றார்கள், அவ் விருப்பத்தை அவர்கள் படைத்தளித்த இலக்கியங்களில் வெளிப்படுத்தியிருக்கின்றார்கள்.

இவ்வழியில் வந்த சேக்கிழார் பெருமானும், தனது பெரிய புராணத்தில் இடம்பெறும் அடியார்களை உயர்ந்த சமூக நாட்டம் உடையவர்களாகவும்! பண்புடையவர்களாகவும் சித்திரித்துள்ளார். அடியவர்களது பண்புகளைப் போற்றித் துதிபபதோடு, கவிக்கூற்றின் (Poetic voice) வாயிலாகவும் அவர்களைப் பாராட்டுகின்றார்.

---

1. புறநானூறு, 182,
2. திருக்குறள், 996

**கொடை**

பெரிய புராண அடியார்கள் தங்களிடம் வந்த சிவனடியார்களுக்கு இல்லையென்னாது வாரிவாரி வழங்கியவர்கள். அவர்கள் தங்களது உடைமைகளை எல்லாம் அடியார்களது உடைமைகளாகக் கருதி வாரி வழங்கியவர்கள். கொடைகொடுத்தவர்களும், அதைப் பெற்றவர்களும் சிவபெருமானிடம் பக்தி கொண்டிருந்த சிவனடியார்களே. சமுதாயத்தில் நிலவிய வறுமையைச் சமயத்தைக் கொண்டு போக்கலாமென்றும், கருதியிருக்கிறார் சேக்கிழார். ஒவ்வொரு சமயத்திலுமுள்ள வசதிபடைத்தவர்கள் தத்தமது சமயத்தைச் சேர்ந்த ஏழை எளியோர்களுக்கு உதவிசெய்தால் சமுதாயத்திலிருந்து வறுமையை அகற்றி விடலாம்.

இயற்பகை நாயனார் தன்னிடம் வந்த அடியார்களுக்கு இல்லையென்னாது வாரி வாரி வழங்கியவர்.

.... ... ... ... சிரடியார்கள் யாரெனினும்
வேண்டும் யாவையும் இல்லை யென்னாதே
இக்கடற்படி நிகழுமுன் கொடுக்கும் இயல்பின்
நின்றவர்[1]

என்பதால் அவரது கொடைத்திறனை அறியலாம். அவரது கொடைத் திறனுக்கே முடிமணியாக, விளங்குவது தன்னிடம் வந்த சிவனடியாருக்கு, தனது மனைவியையே இல்லையென்னாது கொடுத்த நிகழ்ச்சியாகும்.

மெய்ப் பொருள் நாயனார் தன்னிடமுள்ள செல்வ மனைத்தையும் அடியவர்களுக்கு உதவி செய்வதற்காகவே என்று கருதி, தன்னிடம் வந்த சிவனடியார்களுக்கு பொருள்களையும், செல்வங்களையும் வாரிவழங்கியவர்.

---

1. பெரியபுராணம், 'இயற்பகை நாயனார் புராணம்',2

இதனை,

"தேடிய மாடுநீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்காவன ஆகும்" என்று
நாடிய மனத்தினோடு நாயன்மார் அணைந்தபோது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக்கொடுத்து
வந்தார்"[1]

என்று சேக்கிழார் கூறுவதன்மூலம் அறியலாம்.

**மானக்கஞ்சாறர்** தான் பெற்ற செல்வமனைத்தையும் அடியவர்களின் உடைமையாகவே கருதியவர். அவர் தன்னிடம் வரும் சிவனடியார்கள் வாய்திறந்து கேட்காமலேயே அவர்களது குறிப்பினை அறிந்து கொடுக்கும் இயல்பினை உடையவர்.

மாறில்பெருஞ் செல்வத்தின் வளம்பெருக மற்ற
தெலாம்
ஆறுலவுஞ்சடைசகற்றை அந்தணர்தம் அடியாராம்
ஈறில்பெருந் திருவுடையார் உடையாரென்
றியாவையுநேர்
**கூறுவதன் முன்அவர்தங் குறிப்பறிந்து
கொடுத்துள்ளார்.**[2]

திருமணக்கோலத்தோடு நிற்கின்ற தனது ஒரே மகளினுடைய அழகானக்கூந்தலை மாவிரதியார் வடிவில் வந்த பெருமான், 'அணங்கு இவள் தன் மயிர்நமக்குப் பஞ்சவடிக்காம்"[3] என்று தனது விருப்பத்தை வெளியிட, மானக்கஞ்சாறர் தனது மகளுடையக் கூந்தலை மனமகிழ்

1. பெரியபுராணம்' மெய்ப்பொருள் நாயனார் புராணம்', 4
2. பெரியபுராணம், 'மானக்கஞ்சாற நாயனார் புராணம்,' 9
3. பெரியபுராணம், 'மானக்கஞ்சாற நாயனரர் புறாணம்', 29

வோடு அறுத்துக்கொடுத்ததன் மூலம் அவரது கொடைத் தன்மையை அறிய முடிகின்றது.

கழறிற்றறிவார் நாயனார், சிவபெருமானால் தன்னிடம் ஓலை கொடுத்து அனுப்பப்பட்ட இசைவல்லான் பாண பத்திரனுக்கு, அவன் கண்டு மகிழ்வெய்தி வியப்படைகின்ற அளவுக்கு பொருள்களையும் செல்வங்களையும் அளித்தார்.

பரந்த நிதியின் பரப்பெல்லாம் பாண னார்பத்திரனார்க்கு
நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்துக் காட்டி, ''மற்றிவையும்
உரந்தங் கியவெங் கரிபரிகள் முதலாம் உயிருள்ளனதனமும்
**புரந்த அரசும் கொள்ளும்**'' என மொழிந்தார்.[1].........

தன்னுடைய அரசையே பாணபத்திரனார்க்கு அளித்தார் கழறிற்றறிவார் என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

**நல்லுறவு**

பெரியபுராணத்தில், கருத்து வேறுபாடுகளை நீக்கி நல்லுறவை மலரச் செய்யும் சமாதானத் தூதுவராகச் சிவபெருமான் செயல்படுகின்றார்.

பரவை நாச்சியார் தனது கணவர் சுந்தரர் மீது கொண்ட ஊடலைக், கோபத்தைத் தவிர்ப்பதற்காகப் பெருமானே பரவையாரிடம் தூதுசென்று அவரைச் சமாதானம் செய்து, சுந்தரரையும், பரவையாரையும் இணைத்து வைக்கின்றார்.

தன்மனைவி கொண்டுள்ள ஊடலைத் தவிர்ப்பதற்காகச் சுந்தரர் சிவபெருமானை பரவையாரிடயம் தூது அனுப்பியதை விரும்பாத ஏயர்கோன் கலிக்காமருக்குப்

---

1. பெரியபுராணம் 'கழறிற்றறிவார் நாயனார் புராணம்,' 35

பெருமான் சூலை நோயைக் கொடுக்கின்றார். அவரிடம் "இச்சூலைநோய் சுந்தரரால் தான்தீரும்" என்று கூறி சுந்தரரிடம் சென்று, ஏயர்கோனின் சூலை நோயைத் தீர்க்குமாறு கூறுகின்றார். இருவருக்குமிடையில் மீண்டும் நல்லுறவு ஏற்படவே பெருமான் இவ்வாறு செய்கின்றார்.

இல்லறத்தில் கணவன் மனைவியரிடத்தே மனமுறிவு ஏற்பட்டபோது, தேவையேற்பட்டபோது பெருமானே தான் நேரில் வந்து அவர்களிடையே மீண்டும் உறவை மலரச் செய்தமையிலிருந்தும், அடியவர்களுக்கிடையே ஏற்பட்ட மனமுறிவை-மனக்கசப்பை பெருமானே ஈடு பட்டுத் தீர்த்து வைத்தமையிலிருந்தும் மேற்கூறிய பண்பை அறியலாம்.

**பகைவனுக்கும் அருள் வழங்கும் தன்மை**

மெய்ப்பொருள் நாயனார் முத்தநாதன் என்ற பகைவனை, அவன் சிவனடியார் வேடம் புனைந்து வந்து தன்னை வாளால் கொன்றபோது, அவனைக் கொல்ல முயன்ற தத்தனைத் தடுத்து "தத்தா! நமர்" என்று கூறி, அவனுக்கு எவ்வித இடையூறும் ஏற்படாவண்ணம் அவனைக் கொண்டுபோய் ஊரின் புறத்தே விட்டுவிட்டு வருமாறு கூறியதிலிருந்து மெய்ப்பொருளாரிடம் அமைந்திருந்த பகைவனுக்கும் அருள் வழங்கும் பண்பு தெரிகின்றது. மகாத்மா காந்தியடிகள் தன்னைத் துப்பாக்கியால் சுட்டுக் கொன்ற கோட்சேவுக்கும் மெய்ப்பொருளாரைப் போல அருள்வழங்கியது ஒப்புநோக்கி மகிழத்தக்கதாக உள்ளது.

**உறவினர்களே எதிரிகளாக வந்தாலும் அவர்களையும் போரிட்டு அழித்தப் பாங்கு**

இயற்பகையார் தனது மனைவியைத் தன்னிடம் வந்த சிவவேதியரோடு அனுப்பிய செய்தியையறிந்த அவரது

சுற்றத்தார்கள் இயற்பகையாரது செய்கையைக் கண்டித்து

> "இனைத்தொன் றியாரே செய்தார்? இயற்பகை
> பித்தனானால்
> புனையிழை தன்னைக் கொண்டு போவதாம்
> ஒருவன்"[1]........

என்று வெகுண்டெழுந்து இயற்பகையாரின் மனைவியை மீட்க முனைந்தார்கள். அவர்களுக்கெதிராக ஒன்று திரண்டு அவர்களைச் செல்லவிடாது தடுத்தனர்.

இதனையறிந்த இயற்பகையார் தனது சுற்றத்தார்களுடன் போரிட்டு அவர்களை அழித்து ஒழித்ததிலிருந்து இயற்பகையாரிடம் அமைந்திருந்த மேற்குறித்த பண்பு தெரியவருகின்றது.

**பகைவனுக்குக் கூடத்தன்னால் பழிநேரக்கூடாது என்று கருதியமை**

ஏனாதி நாதருடன் பலமுறை போரிட்டுத் தோல்வியைத் தழுவியவன் அதிசூரன் ஒரு நாள் போரில் நெற்றியில் நீறுபூசி சிவனடியார் போன்று சிவவேடப் பொலிவோடு காணப்பட்டான்.

> "அண்டர்பிரான் சீரடியார் ஆயினார்" என்று மனங்
> கொண்டு இவர்தங் கொள்கைக் குறிவழி நிற்பேன்"[2]

என்று, ஏனாதி நாதர் சிவனடியார் போன்று காணப் படுவதால் அவனை எதிர்த்துப் போரிடாது நின்றார். அது மட்டுமன்றி, தன் கையில் வாளும் கேடயமுமன்றி

---

1. பெரியபுராணம் 'இயற்பகை நாயனார் புராணம்,' 13
2. பெரிபுராணம் 'ஏனாதி நாத நாயனார் புராணம்' 38

நிராயுதபாணியாக இருந்தவரைச் சிவனடியார் போரில் கொன்றார் என்ற பழி அவனுக்கு வரக்கூடாது என்பதற் காகக் கையில் வாளும் கேடயமும் கொண்டு போரிடுபவர் போல நடித்தார்.

அதிசூரனுடைய நெற்றியில் திருநீறு காணப்பட்டதற் காக அவனைக்கொல்லாமல் விட்டதிலிருந்தும், சிவனடி யார் ஒருவர் நிராயுதபாணியான ஒருவரைக் கொன்றார் என்றபழி அதிசூரனுக்கு ஏற்படக்கூடாது என்பதற்காகத் தான் கையில் வாளும் கேடயமும் கொண்டு எதிர்த்துப் போரிடுபவரைப் போல நடித்ததிலிருந்தும் ஏனாதி நாத ரிடம் அமைந்திருந்த மேற்குறித்தப் பண்பு தெரியவருகின் றது.

**பிற பெண்களைத் தனது மகளாகக் கருதிய பண்பு**

சுந்தரர் திருநாட்டியத்தான் குடிக்குச் சென்றபோது அங்கு கோட்புலியார், தனது மகளிரான தேனார் கோதைச் **சிங்கடியாரையும்**, மானார் நோக்கின் **வனப்பகை**யையும் அழைத்துக் கொண்டுவந்து சுந்தரரது திருவடிகளைத் தொழுது, தனது மகளிரை அடிமையாகக் கொண்டருள வேண்டிட, சுந்தரர் அதை மறுத்து, தன்னை அவர்களது தந்தையாகக் கொண்டு, தான் பாடிய பதிகங்களில் திருக் கடைக்காப்புச் செய்யுளில் தன்னைச் 'சிங்கடியப்பன்' என்று பாடியருளினார்.

திருமயிலையில், சிவநேசர் தனக்குப் பிறந்த ஒரே மகளான பூம்பாவையை ஞானசம்பந்தர் பெருமானுக் கென்றே வளர்த்து வந்தார். சிறுவயதிலேயே பூம்பாவை இறந்துவிட அவளது எலும்புச் சாம்பலை ஞானசம்பந்த ரிடம் கொடுக்கப் பத்திரப் படுத்தி வைத்திருந்தார். ஞான சம்பந்தர் திருமயிலாப்பூருக்கு எழுந்தருளியிருந்த போது,

பூம்பாவையின் எலும்புச்சாம்பலை அவரிடம் கொடுத்திட, அவர் ''மட்டிட்டப் புன்னையங்கானல் மடமயிலை'' என்ற பதிகம் பாடினார். அப்போது பூம்பாவை அவ் எலும்புச் சாம்பலிலிருந்து உயிர்பெற்று எழுந்தார். சிறுவயதிலேயே இறந்த பூம்பாவை அப்போது வாழ்ந்திருந்தால் எத்தனை வயதை அடைதிருப்பாரோ அத்தனை வயதோடு பேரழகுடன் காணப்பட்டார்.

சிவனேசர், தனது மகள் பூம்பாவையை மணந்து கொள்ளுமாறு ஞானசம்பந்தரிடம் வேண்ட, அவர் அவரது வேண்டுகோளை மறுத்து, 'உமது பெண் விஷத்தினால் இறந்து விட்டாள், யான் இறைவன் அருளினால் உருவாக்கிய பெண் எனக்கு மகள் போன்றவள்' என்று கூறிவிட்டார்.

......... ......... ......... ......... ......... நீர்
பெற்றபெண் விடத்தினால் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை காண்வர
உற்பவிப் பித்தலால் உரைத காது[1]

என்று ஞானசம்பந்தர் கூறுவதன்மூலமும், சிவநெறியில் நின்ற சான்றோர்கள் மற்ற பெண்களைத் தனது மகளாகக் கருதிய பண்புச் சிறப்பைக் காணமுடிகின்றது.

**பெண்கள் தனியே இருக்கும் இடத்தில் பிற ஆடவர் இருந்திட விரும்பாதப் பண்பு:**

பெண்கள் தனியே இருக்கும் போது அவர்களது கணவர் அல்லது தந்தை அல்லது உடன் பிடிந்தார் தவிர, பிற ஆடவர்கள் அவ் இடத்தில் இருக்கக்கூடாது. இருந்தால் அவ் ஆடவர்க்கோ அல்லது அப்பெண்ணிற்கோ தீராத பழி ஏதேனும் உண்டானாலும் உண்டாகலாம்.

1. பெரியபுராணம், 'திருஞான சம்பந்த சுவாமிகள் புராணம்',1114

பெரிய புராணத்தில் இப்பண்பு சமய நெறி நின்ற சான்றோர்களால் போற்றிக் காக்கப்படுகின்றது.

சிறுத்தொண்டர், அடியாரை உணவு உண்பிப்பதற்காக அவர்களைத்தேடி வெளியே சென்றிருக்கையில், அவரைத்தேடி வந்த காபாலிகரிடம் சந்தனத்தாதையார்,

"அந்த மில் சீர் அடியாரைத் தேடி அவர் புறத்தணைந்தார்
எந்தமை ஆளுடையவரே **அகத்துளெ ழுந்தருளும்**"[1]

என்று, வீட்டினுள் வந்து அமருமாறு அழைக்க, அவர்

"மாதரார் தாமிருந்த இடவகையிற் றனிபுகுதோம்"[2]

என்று, பெண்கள் தனியாக இருக்கும் இடத்தில் யான் தனியாகஇருக்க மாட்டேன் என்று கூறிக் கணபதீச்சரத்தின் கண் உள்ள திருஆத்தியின் கீழ் அமரச் சென்று விடுகின்றார்.

இளையான்குடி மாறர் தன்னை நாடி வந்த சிவனடியாரை அமுதூட்டி உபசரிக்கவேண்டி, வயலில் விதைத்திருந்த நெல்முளைகளை வாரிக்கொண்டுவர வயலுக்குச் சென்றிருந்த போது, அவரது மனைவியார் ஆடவரான சிவனடியார் உள்ளே அமர்ந்திருக்கும்போது (பிற ஆடவர் தன் வீட்டினுள் இருக்கும்போது) தான் மட்டும் வீட்டினுள்ளே இருக்க விரும்பாமல், வயலுக்குச் சென்றிருந்த தனது கணவனது வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பது போல வீட்டு வாயில் காத்திருந்தாராம். தனது கணவர் நெல்முளைகளைக் கொண்டு வந்து கொடுத்த உடன் அதை

---

1. பெரியபுராணம், சிறுத்தொண்ட நாயனார் புராணம், 37
2. பெரியபுராணம், சிறுத்தொண்ட நாயனார் புராணம், 38

வாங்கிக்கொண்டு உள்ளே சென்றாராம். இக் கருத்தினைச் சேக்கிழார்.

"....வந்தபின் மனைவியாரும் **வாய்தலின் நின்று வாங்கி**"[1]

என்னும் வரிகளில் குறிப்பிடுகின்றார்.

மேற்கூறப்பட்ட நிகழ்ச்சிகளிலிருந்து பெண்கள் தனித்திருக்கும்போது பிற ஆடவர்களும், பிற ஆடவர்கள் வீட்டினுள் இருக்கும்போது பெண்ணும் வீட்டிற்குள் இல்லாதிருந்த பண்பு தெரிய வருகின்றது.

**சமூகப் பிரச்சினைகளின் மீது கொண்ட ஆர்வம்**

இதிகாசங்கள், புராணங்கள், வேதங்கள், உபநிடதங்கள் ஆகியவற்றை மட்டும் வைத்துக்கொண்டால் சமயம் வளராது; வாழாது.

சமூகத்தை வாட்டுகின்ற-தாக்குகின்ற பிரச்சினைகளை அறிந்து கொண்டு அவற்றைத் தீர்த்துவைக்கின்ற முயற்சிகளில் சமய நெறியாளர்கள் ஈடுபட்டால்தான் அவர்கள் சார்ந்திருக்கின்ற சமயம் வாழும்-வளரும்.

பெரியபுராணத்தில் இடம் பெறும் அடியார்கள் திருக்கோயிலோடு மட்டும் முடங்கிப் போய்விடாமல் சமூகப் பிரச்சினைகளைக் கண்டறிந்து அவற்றைத் தீர்த்து வைக்கும் முயற்சியில் ஈடுபட்டு, தீர்த்து வைத்தார்கள்.

"என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்பதையே குறிக்கோளாக உடையவர் அப்பர்.

---

1. 'பெரியபுராணம்', இளையான்குடி மாற நாயனார் புராணம்',19

திருவீழிமிழலையில் கொடிய பஞ்சம் ஏற்பட்ட போது, அதனைப் போக்குவதற்காக அப்பரும் சம்பந்தரும் பெருமானைப் பாடிப் படிக்காசு பெற்று அப்பஞ்சத்தைப் போக்கினார்கள்.

பழையாறையில் சமணர்களால் மறைக்கப்பட்டிருந்த சிவன்கோயிலை மீண்டும் திறக்கவேண்டி உண்ணா நோன்பிருந்து, மன்னனின் மூலம் அக்கோயிலைத் திறக்கச் செய்தார் அப்பர்.

ஞான சம்பந்தர், பெருமானை வழிபட திருமருகலுக்குச் சென்றபோது, நேரே திருக்கோயிலுக்குச் செல்லாமல், தனது மாமனை இழந்துவிட்டு அழுகின்ற அபலைப் பெண்ணின் அழுகுரல் கேட்ட சத்திரத்திற்குச் செல்கின்றார். அவளை வினவி செய்தியை அறிந்து கொள்கின்றார். அவளும், தான் மணந்து கொள்ளவிருந்த தனது மாமன் விடந்தீண்டி இறந்துவிட்ட செய்தியைக் கூற, ஞான சம்பந்தர், 'சடையாய் எனுமால், சரணீ எனுமால்' எனும் பதிகத்தைப்பாடி திருக்கடைக்காப்புச் செய்யுள் பாடியதும் அவன் உயிர் பெற்று எழுந்து விடுகின்றான். பிறகு, ஞான சம்பந்தர் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வழி படுகின்றார்.

இக்காலத்தில் வாழ்கின்ற சமயத்தலைவர்களும் ஞான சம்பந்தர், நாவுக்கரசர் காட்டிய வழியிற்சென்று சமூகப் பிரச்சினைகளைத் தீர்க்க முற்பட்டால் இந்து சமயம் கோயிலுக்குள் மட்டும் முடங்கிக் கிடக்கும் சமயமாக இல்லாமல் மக்கள் சமயமாகத் திகழும் என்பதில் அய்ய மில்லை.

திருநாவுக்கரசையே தனது உறுதிப் பொருளாகக்

கொண்ட அப்பூதியடிகள், நடைப்பயணம் செய்வோரின் களைப்பை-வாட்டத்தைப் போக்குவதற்காகத் தண்ணீர்ப் பந்தல், சோலை, குளம் போன்றவற்றைத் திங்களூரில் அமைத்து சரியாகப் பராமரித்து வந்தார்.

சிவனடியார்களுக்கு இடையூறு செய்பவர்களைத் தனது மழுவால் தண்டித்து அவர்களுக்குப் பாதுகாவலாகத் திகழ்ந்தவர் **எறிபத்தர்.**

மேற்கூறப்பட்ட சம்பவங்கள்/வரலாற்றின் மூலம் சமூகப் பிரச்சினைகளின்பால் அடியார்கள் கொண்டிருந்த ஆர்வமும், அதை அவர்கள் தீர்த்த பாங்கும் தெரிய வருகின்றன.



# பயன்பட்ட நூல்கள்

## இலக்கியங்கள்

### முதன்மை நூல்

1. சேக்கிழார், "திருத்தொண்டர் புராணம்", கழகப் பொன் விழாச் சிறப்பு வெளியீடு, கழகம், சென்னை, 1970.

### துணைமை நூல்கள்

2. இளங்கோ வடிகள், "சிலப்பதிகாரம்", கழக வெளியீடு, சென்னை, 1979,
3. உமாபதிசிவாசாரியார், கொற்றவன்குடி, "சேக்கிழார் நாயனார் புராணம்", ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள், 1964.
4. கம்பர், "கம்பராமாயணம்", கம்பன் கழகம், சென்னை, 1976.
5. திருவள்ளுவர், "திருக்குறள்", (பரிமேலழகர் உரை கழக வெளியீடு, சென்னை, 1976.
6. "கலித்தொகை", கழகவெளியீடு, சென்னை, 1938.
7. "குறுந்தொகை", கழக வெளியீடு, சென்னை, 1965.
8. "புறநானூறு", கழக வெளியீடு, சென்னை, 1973.

### திறனாய்வு நூல்கள்

9. அருணாசலம். மு., "தமிழ் இலக்கிய வரலாறு" (பன்னிரண்டாம் நூற்றாண்டு), காந்தி வித்யாலயம், மாயூரம், 1973.
10. ஆறுமுகநாவலர்., "பெரிய புராணம் (சத்திய ரூபம்)", வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, ஜய வருஷம்.

11. ஆறுமுகநாவலர்., "பெரியபுராண வசனம்", வித்தியாநு பாலனயந்திர சாலை, சென்னைப் பட்டணம், 1852.

12. இரத்தின தேசிகர்., '.பெரிய புராணத் திறவுகோல்", 1974.

13. இராசமாணிக்கனார். மா., "பெரிய புராண ஆராய்ச்சி", பாரி நிலையம், சென்னை, 1960.

14. இராசமாணிக்கனார். மா., "சேக்கிழார்", அண்ணா மலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1969.

15. கல்யாண சுந்தரம், திரு.வி.க, "நாயன்மார் வரலாறு". சென்னை, 1958.

16. சிங்கார வேலன், சொ., "அப்பர் அருட் செய்தி", தெய்வத் தமிழ் மன்ற வெளியீடு, மாயூரம், 1974.

17. சுப்பிரமணிய பிள்ளை, கா., "சேக்கிழார் அடிகள் வரலாறும் பெரிய புராண ஆராய்ச்சியும்", கழகம், சென்னை, 1975.

18. சுப்பிரமணிய முதலியார், "சேக்கிழார்", கோவைத் தமிழ்ச் சங்கம், சாது அச்சுக் கூடம், சென்னை, 1954.

19. சுப்பிரமணிய முதலியார், "பெரிய புராணப் பேருரை", கோவைத் தமிழ்ச் சங்கம், கோவை, 1954.

20. ஞானசம்பந்தன் அ.ச., "தேசிய இலக்கியம்", சேகர் பதிப்பகம், சென்னை, 1966.

21. தட்சிணாமூர்த்தி. அ., "தமிழர் நாகரிகமும் பண் பாடும்", வெற்றிச் செல்வி வெளியீட்டகம், 1980.

2 திருநாவுக்கரசு. க த., 'சமஸ்கிருத ஆதிக்கம்,' பண்பாடு சமஸ்கிருதமாக்கப்படல்', பெரியார் திறந்த வெளிப் பல்கலைக் கழக வெளியீடு, சென்னை, 1985.

23. நீலாம்பிகை அம்மையார், தி., "பட்டினத்தார் பாராட்டிய மூவர்", கழக வெளியீடு, சென்னை.

24. மகாதேவ முதலியார், "பெரியபுராண ஆராய்ச்சி" கழகம், சென்னை, 1970.

25. வெள்ளைவாரணன், க., "பன்னிரு திருமுறை வரலாறு" (8-12 திருமுறைகள்), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1969.

**கட்டுரை**

செல்வக்கணபதி. இரா., "சைவமும் பெரியபுராணமும்", தமிழ்ப் பல்கலைக் கழகத் தத்துவமையம், காஞ்சிபுரம் (கருத்தரங்கக் கட்டுரை), நாள்,11-3-85.

**அகராதிகள்**

1. கதிரை வேற்பிள்ளை, "தமிழ் மொழி அகராதி", 1981.
2. Chettiyar. A.C., (Chief Editor) "English-English Dictionary", Madras University, Madras.
3. "The New Encyclopaedia Brittanica In 30 Volumes", William Benoow Publishers, London, 1977.

---

# பிற்சேர்க்கை

## பெரியபுராண பதிப்புகளும், ஆராய்ச்சி நூல்களும்

பெரியபுராணப் பதிப்புகளை இருவகையாகப் பிரிப்பர். 1) மூலம் மட்டும் கொண்ட பதிப்பு. 2) மூலமும் உரையும் கொண்ட பதிப்பு. மூலம் மட்டும் கொண்ட பதிப்புகள் மொத்தம் ஆறு வந்துள்ளன. உரையோடு கூடிய பதிப்பு களாக 5 வெளிவந்துள்ளன.

### மூலம் மட்டும் உள்ள பதிப்புகள்

1. காஞ்சி சபாபதி முதலியார் பதிப்பு-இது 1859, 1870 ஆகிய ஆண்டுகளில் இருமுறை பதிப்பித்து முதற்பதிப் பாக வெளிவந்தது.
2. ஆறுமுக நாவலர் பதிப்பு-1854 இல் முதற்பதிப்பாக வெளிவந்தது.
3. திரு.வி. கலியாண சுந்தரனார் பதிப்பு-1910ல் வெளி வந்தது.
4. சைவ சிந்தாந்த மகாசமாஜப்பதிப்பு-1934ல் வெளி வந்தது.
5. திருப்பனந்தாள் காசிமடத்துப்பதிப்பு-1964ல் வெளி வந்தது.
6. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப்பதிப்பு-1970-ல் வெளிவந்தது.

இவற்றில் காஞ்சி சபாபதி முதலியார் பதிப்பு பற்றிய குறிப்புகள் ஏதும் கிடைக்கவில்லை. ஆறுமுக நாவலர் பதிப் பில் காரைக்காலம்மையார் புராணம் வரையில் (சூசனம்) நுண்பொருள் எழுதப்பட்டுள்ளது. இப்பதிப்பு பிழையே யில்லாமல் விளங்குகிறது.

திரு.வி. கலியாணசுந்தரனார் பதிப்பில் மூலத்தோடு கூடிய குறிப்புரை காணப்படுகிறது. இவரது குறிப்புரையை பின்வந்த சைவ சித்தாந்த வல்லுநர்கள் மறுக்கின்றார் கள். சைவசித்தாந்த மகாசமாஜப் பதிப்பானது பிழையற்ற பதிப்பாக முழுவடிவில் அமைந்துள்ளது. இந்நூல் மா. பால

சுப்பிரமணிய முதலியார் அவர்களின் குறிப்புரை மிகவும் பயன்தரும் வகையில் அமைந்துள்ளது.

திருப்பனந்தாள் காசிமடத்துப் பதிப்பின் நோக்கம் நூலை அடக்க விலையில் வெளியிட வேண்டும் என்பதும், பாடலைப் பிரித்துப் பொருள் கொள்வதற்கு எளிதாக இருக்கவேண்டும் என்பதுமேயாகும். சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகப்பதிப்பு இராமநாதப்பிள்ளை அவர்களின் சிறப்புரையுடன் வெளிவந்தது.

**உரைப்பதிப்புகள்**

1) மகாலிங்க ஐயர் பதிப்பு—ஆனாய நாயனார்புராணம் வரையில் உள்ளது. பாடலை ஒட்டிய பொழிப்புரை மட்டும் உள்ளது மிகப்பழமையானப் பதிப்பு.

2) ஆறுமுகத்தம்பிரான் உரைப்பதிப்பு—நூல் முழுமையும் உரை உள்ளது. 1945-ஆம் ஆண்டு வெளிவந்தது.

3) சுப்பராய உரைப்பதிப்பு—நூல் முழுவதும் உரை உள்ளது.

4) ஆலாலசுந்தரம்பிள்ளை உரைப்பதிப்பு—முதல்மூன்று சருக்கத்திற்கு மட்டும் உரை உள்ளது.

5) சி.கே.எஸ். சுப்பிரமணிய முதலியார் உரைப்பதிப்பு—நூலிற்கு முழுமையான உரைஉள்ளது. 1937ல் பதிப்பிக்கப்பெற்றது.

**பெரியபுராண வசனம்**

பெரியபுராண நூலை எல்லோரும் படித்து இன்புற இயலாமல் இருப்பதால் எல்லோரும் படித்து இன்புற வேண்டும் என்ற உயர் நோக்கில் எழுதப்பட்டதே பெரிய புராண வசன நூல்கள். இவை சைவ சமய மக்களிடையே எல்லோரிடமும் காணப்பெறல் வேண்டும்; எளிய மக்கள் உள்ளத்தில் ஒரு புத்துணர்வை ஊட்டவேண்டும் என்னும் முயற்சியாலும் வெளிவந்தன. அப்போது, உரைநடை வளர்ச்சியில் மிகுந்த ஆர்வத்தோடு விளங்கிய மக்களுக்கு

